

# நேற்றைய சாகுபடி முறைகள் குறைந்த மகசூல்.. குறைந்த இலாபம்

அடுத்த தடவை உங்களுக்குப் புதிய டிராக்டர்கள், ஸ்ப்ரேயர்கள் அல்லது உழவு இயந்திரங்கள் போன்ற நவீன விவசாயக் கருவிகள் தேவைப்படும் போது, அருகிலுள்ள ஸ்டேட் பாங்க் கிளையை அணுகுங்கள்.

விவசாய உற்பத்தியை அதிகரிக்கும் பொருட்டு, உங்கள் பண்ணையை நவீன மயமாக்க ஸ்டேட் பாங்க் உதவும்: விவசாயிகளுக்கான நேர்முக நிதி உதவித் திட்டத்தின் கீழ் ரொக்கக் கடன்களை நீங்கள் பெறலாம்!



# இன்றைய நவீன சாகுபடி முறைகள் அமோக மகசூல்... அமோக இலாபம்

**சேவை புரிவதற்கே**
**ஸ்டேட் பாங்க்**

S 380 TM



# கல்கி

## பொருளடக்கம்



சௌமிய, ஆனி 15 ※ 1969, ஜூன் 29



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 48



# மதியற்ற ஆயுதப் போட்டி

தேசப் பிரச்னைகள் அனைத்திலும் அதிகக் கவலையைத் தருவது அரசாங்கத்தின் செலவு விஷயம். இது முக்கியமாக, உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டும். யார் தலைமையில் சர்க்கார் நடக்கிறது, ஆளும் கட்சி எது என்பவை அவ்வளவு முக்கியம் அல்ல. நமது அரசாங்கத்தின் செலவு ஆண்டுதோறும் அதிகரித்துக் கொண்டே போகிறது. நமது வசதிகளால் சமாளிக்க முடியாத அளவுக்கு அது உயர்ந்து வருகிறது. அதைப் பற்றி என்ன செய்யப் போகிறோம் என்பது தான் முக்கியம்.

நிர்வாகச் செலவைக் குறைப்பதற்கு அவ்வப்பொழுது வெவ்வேறு யோசனைகள் கூறப்பட்டுள்ளன. அவை திறம்பட நடைபெறுவது இரண்டு விஷயங்களைப் பொறுத்தது. ஆள் குறைப்பை மேற்கொள்ளச் சர்க்கார் தயாரா? ஏராளமான சிப்பந்திகள் வேலை இழப்பதால் ஏற்படும் துயரைச் சமாளிப்பதற்கான சாமர்த்தியம் சர்க்காருக்கு உண்டா என்பதையே இந்தப் பிரேரணைகளின் வெற்றி பொறுத்திருக்கிறது. சிப்பந்திகள் கிளர்ச்சி செய்வர். பொது மக்களின் அனுதாபம் அவர்கள் பால் தான் இருக்கும். கடுமையான போலீஸ் நடவடிக்கை மூலம் கிளர்ச்சியை அடக்க முடியாது. தனியார் நடத்துகின்ற தொழில்கள் நிறைய இருந்தால் மட்டுமே, வேலை இழந்த அரசாங்க ஊழியர்களுக்குப் பிழைப்புக் கிடைக்கும். அப்படி இல்லாத நிலைமையில் நிர்வாகச் செலவைக் குறைப்பது சாத்தியமல்ல. பாதுகாப்புச் செலவு, அந்நியக் கடன்கள் விஷயமான பொறுப்புகள், பெரிய அளவில் முதலீடு செய்திருக்கின்ற அரசாங்கத் தொழில்களில் ஏற்படும் நஷ்டங்கள், வாக்காளர்களைக் கவருவதற்காக ஆளும் கட்சியினர் 'க்ஷேம அபிவிருத்தி'யின் பெயரால் செய்யும் செலவு ஆகியவற்றைக் குறைத்தாக வேண்டும். கணிசமான பயன் கிட்ட வேண்டுமாயின் தைரியமாகப் புது முயற்சிகளில் இறங்க வேண்டும். திவாலாகும் நிலைமையில் கொண்டு போய்விடக்கூடிய பழைய பாதைகளை விட்டு விலக வேண்டும். தொடர்ந்து வெளிநாடுகளில் கடன் வாங்கிக் கொண்டே போனால் கற்பனை உலகில்தான் வாழலாம். ஆனால் வர வர அந்நிய வல்லரசுகளின் நிலைமையே சிரமமாகி வருகிறது. எனவே, கடன் கிடைப்பது இனி அரிதாகி விடும். இது வரை நடந்தது போல் இனியும் கடன் கொடுத்து நமது நன்றியைப் பெறுகின்ற ஆர்வம் அவற்றிடம் இராது.

ஒரு தேசத்தை இன்னொரு தேசத்தோடு மோத விட்டு, நமக்கு உதவி அளிப்பதில் அவற்றைப் போட்டி போடச் செய்வதற்கு நம்மால் இனி முடியாது. நம்மையும், பாகிஸ்தானையும் சமமாகப் பாவித்து, எதனுடனும் சேராமல் இருக்கின்ற தந்திரத்தை மற்ற நாடுகள் தெரிந்துகொண்டு விட்டன.

செலவு பெரிதாயிருப்பதன் மூல காரணம் பாகிஸ்தானின் பகைமை உணர்ச்சி. அதை அகற்ற வேண்டும். நம்பிக்கையை வளர்த்து நமக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே ஆயுதப் போட்டியை அவசியமற்றதாக்கிவிட வேண்டும். இதுதான் இன்றைய நிலைமையைச் சமாளிப்பதற்கு உரிய வழி. பல காரணங்களால் இது சிரமமாகத் தோன்றலாம். அவர்கள் தவறு இழைத்திருக்கலாம்; நாமும் சில தவறுகளை இழைத்திருக்கக் கூடும். பாகிஸ்தானின் பகைமை உணர்வு நீங்கி நல்லெண்ணமும், நம்பிக்கையும் ஏற்பட வேண்டுமானால் காஷ்மீர் விவகாரத்தைத் தீர்த்தாக வேண்டும். இல்லையேல் ஆயுதப் போட்டிக்கு ஆகும் செலவிலிருந்து தப்புவதற்கு வேறு வழியில்லை.

காஷ்மீர் பிரச்னை தீராமல் இருந்தாலும்கூட நல்லெண்ணத்தை ஏற்படுத்துவது சாத்தியமே என்று நாம் தத்துவம் பேசலாம். இந்தியாவுடன் காஷ்மீரை மகாராஜா இணைத்து விட்ட போதே விஷயம் முடிந்து விட்டது என்று வாதிடலாம். ஆனால்

அத்தகைய சட்டரீதியான பேச்சு பயனற்றது. ஏற்பட்டுள்ள சிடுக்கைச் சமாளிக்கச் சட்டவாதத்தால் முடியாது. மக்கள் நியாயமற்ற வகையில் உணர்ச்சி வசப்பட்டிருக்கலாம். ஆயினும் சக்திவாய்ந்த புத்திசாலிகளான தலைவர்களால்கூட அந்த உணர்ச்சிகளைப் புறக்கணிக்க முடியாது. இந்தியாவிலும் சரி, பாகிஸ்தானிலும் சரி, அவற்றுக்குத் தலைவணங்கித்தான் ஆக வேண்டும்.

காஷ்மீர் சம்பந்தமாக என் பிரேரணையை வெளியிட்டுள்ளேன். இந்தியாவில் உள்ள மக்கள் அதைப் புரிந்து கொள்ளாததுடன், அதைத் திரித்துக் கூறித் தவறாக விளக்கி அது அடியோடு ஏற்கத் தகாதது எனத் தோன்றும்படி சித்திரித்துக் காட்டுகிறார்கள்.

காஷ்மீரை எந்த உலக வல்லரசுக்கோ அல்லது வல்லரசுகளுக்கோ தானமாகக் கொடுத்துவிட வேண்டும் என்பது என் பிரேரணை அல்ல. ஒன்றுக்கொன்று எதிரிடையாக இருக்கும் இரண்டு வல்லரசுகள் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குக் காஷ்மீரைக் கூட்டு தர்மகர்த்தாக்களாக நிர்வகிக்க வேண்டும் என்பதுதான் என் பிரேரணை. குறிப்பிட்ட அந்தக் காலத்தில் காஷ்மீரின் நிர்வாகப் பொறுப்பிலிருந்து நாம் விடுபட்டிருப்போம். இதன் விளைவாக உணர்ச்சிகள் தணிவுறும். குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு காஷ்மீர் மக்கள் எத்தகைய சர்க்காரை விரும்புகிறார்கள் என்பதைக் கண்டறிய அந்த வல்லரசுகள் வழி செய்யலாம். பொதுஜன வாக்கை எடுக்கலாம், அல்லது அரசியல் நிர்ணய சபையைக் கூட்டலாம், அல்லது வேறு அமைப்பைத் தோற்றுவிக்கலாம். சுய நிர்ணய உரிமைக் கோட்பாட்டுக்குப் பாகிஸ்தான் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறது. அதைக் கொள்கையளவில் இந்தியாவால் எதிர்க்க இயலாது. சுய நிர்ணய உரிமை மூலம் காண்கின்ற முடிவுக்கு எதிராகக் காஷ்மீர் இந்தியாவுடன்தான் இருக்க வேண்டும் என்று கேட்பது நியாயமாயிராது.

எனது பிரேரணைக்குக் கடும் எதிர்ப்பு இருக்கும் என்பது நான் அறிந்ததே. தேசம் திவாலாகிவிடுகின்ற நிலையிலிருந்து தப்புவதற்கு வேறு வழி எதுவும் எனக்குப் புலப்படவில்லை. பல வாரங்கள் சிந்தித்து இதைக் கூறுகிறேன். இது தனிப்பட்ட முறையில் நான் சொல்லும் புத்திமதி. சுதந்திரக் கட்சி என் பிரேரணையை ஏற்றுக் கொண்டு பிரபலப்படுத்த முன்வராது. ஏனெனில் இப்போதைய போக்கின் தவிர்க்க முடியாத விளைவுகளை மக்களால் இன்னும் புரிந்து கொள்ள முடியாதபோது என் கருத்துக்கு ஆதரவு தந்தால் சுதந்திரக் கட்சி மக்களிடம் மதிப்பிழக்கவே நேரிடும். மெஜாரிட்டியும், அதிகாரப் பொறுப்பும் உள்ள கட்சியினால்தான் என்னுடைய யோசனையை ஏற்க இயலும். ஆளும் கட்சியின் பொருளாதாரக் கொள்கையினால் விளைகின்ற தவறுகளைப் பெரிதும் கஷ்டப்பட்டு மக்களுக்கு உணர்த்த வேண்டிய நிலைமையில் உள்ள ஒரு கட்சிக்கு என் யோசனையை ஏற்பது சிரமமான விஷயம். காஷ்மீர் இந்திய யூனியனின் பகுதியாக இருக்க வேண்டும் என்று அந்த இராஜ்ய மக்கள் விரும்புவதாகக் கூறப்படுமாயின், பொதுஜன வாக்கெடுப்புக் கோரிக்கை சட்ட விரோதமானது, அநாவசியமானது என்றும் கூறப்படுமாயின், கருத்தறியும் வோட்டெடுத்து, சிடுக்கை அறுத்து, விவகாரத்தைப் பைசல் செய்வதற்கு இப்பொழுதே ஒப்புக் கொள்வதுதான் சரியான பணியாக இருக்கும். கடன் வாங்கிய பணத்தைக் கொண்டு, சகிக்க முடியாத ஆயுதப் போட்டியில் நீடிக்கலாகாது.

பாகிஸ்தானுக்கும், இந்தியாவுக்கும் இடையே இருந்து வரும் பகை உணர்வுக்கு முடிவு கட்டும் நோக்கத்துக்கு என்னுடைய யோசனையைவிட இன்னும் நல்லதொரு திட்டத்தை வேறு யாராவது உருவாக்கி, திவாலாகி விடாமல் இரு தேசங்களையும் காப்பாற்றுவது சாத்தியமே. நான் எழுதியிருப்பது இவ்விஷயத்தைப் பற்றிய சிந்தனையை ஊக்குவிக்குமாக.

(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியதின் தமிழாக்கம்)

# பாங்கு வேலைநிறுத்தம்

''ஸ்டேட் பாங்கு ஆப் இந்தியா'' என்பது சர்க்கார் நடத்தும் பாங்கு. அதற்குத் தேசமெங்கும் எல்லா முக்கிய ஊர்களிலும் கிளைகள் இருக்கின்றன. அவற்றின் ஏஜண்டுகளும், அவர்களைப் போன்ற மேலதிகாரிகளும் சென்ற வாரம் வேலைநிறுத்தம் செய்ய நேரிட்டது மிக வருந்தத்தக்க நிகழ்ச்சி. சம்பள உயர்வுக்காகவும், வேலைப் பளு குறைவதற்காகவும், சிலர் மீது எடுத்த ஒழுங்கு நடவடிக்கையை ரத்துச் செய்வதற்காகவும் ஸ்டிரைக் அவசியமாயிற்று என்பது அவர்களது வாதம். இவை எல்லாமே வேலைநிறுத்தமின்றித் தீர்ந்திருக்கக் கூடிய குறைகள். பொறுப்புள்ள அதிகாரிகள் இவற்றுக்காக வேலை செய்ய மறுத்தது நியாயமாகாது. இம்மாதிரி ஒரு நிலைமை ஏற்படும்படி அரசாங்கம் அனுமதித்திருக்கவும்கூடாது. தேசத்திலுள்ள மொத்த பாங்கு வசதிகளில் மூன்றிலொரு பங்கு ஸ்டேட் பாங்கின் பொறுப்பில் இருக்கிறது. அதன் கிளைகள் மூடிக் கிடந்ததால் வேறு பல சாதாரண பாங்குகளின் அலுவல்களும் பரவலாகப் பாதிக்கப்பட்டுள்ளன. தொழில்களை நடத்துவோரும் வியாபாரிகளும் பட்ட கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல.

நல்ல சம்பளம் வாங்கும் அதிகாரிகள் நிர்வாகத்தை நிர்ப்பந்திப்பதற்காக வேலைநிறுத்தம் செய்வது நியாயமானால், தம் கீழ் பணி புரியக்கூடியவர்களிடம் எப்படி ஒழுங்காக அவர்களால் வேலை வாங்க முடியும்? பாங்குகள் அனைத்தையுமே சர்க்கார் எடுத்துக் கொண்டுவிட வேண்டும் என்று சிலர் கோருகிறபடி நடந்து, இப்படி ஒரு வேலைநிறுத்தம் வந்தால், தேசத்தின் வாழ்வு ஸ்தம்பித்து விடாதா? இவற்றையெல்லாம் பொதுமக்கள்சிந்தித்துப் பார்ப்பது அவசியம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

எல்லாக் கட்சிகளின் கருத்தொற்றுமை மூலம் ராஷ்டிரபதி பதவிக்கு நியமனம் செய்வது என்ற எண்ணம் மறைந்து விட்டதாகத் தோன்றுகிறது. காங்கிரஸ்காரர்களிடையே இருந்து வரும் வேறுபாடுகளைச் சமரசப்படுத்தும் முயற்சிதான் இப்போது நடக்கிறது. பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரூவை நியமிக்க வேண்டும் எனப் பிரதம மந்திரிக்குக் கூறினேன். இன்றைய நிலைமையில் ஆளும் கட்சி அதை ஏற்க வேண்டும் என்றும் வற்புறுத்தினேன். எனது இந்தப் புத்திமதியை நேருஜி புறக்கணித்திருக்க மாட்டார் என்பதை ஸ்ரீமதி இந்திரா காந்திக்குத் துணிந்து கூறுவேன். அவரை நியமித்திருந்தால் இந்தியாவெங்கும் பிரதம மந்திரியின் மதிப்பும் மத்திய சர்க்காரின் மதிப்பும் நிச்சயமாக உயர்ந்திருக்கும்.

தீவிர விசுவாசமுடைய காங்கிரஸ் கட்சியாளர் ஒருவரைத்தான் நியமிக்க வேண்டுமென்று ஸ்ரீ நிஜலிங்கப்பா கூறியதாகத் தெரிகிறது. பல தேசங்கள் சென்று வந்து சர்வ தேசத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்ட பிறகு அவர் இப்படிக் கூறுவது ஏமாற்றத்தைத் தருகிறது. சக்தி வாய்ந்த தலைமையின் கீழ் ஒரு காலத்தில் காங்கிரஸ் புரிந்த சாதனைகளுக்காக அதை நேசிக்கின்றவர்கள் இருக்கிறார்கள். எல்லோரின் நன் மதிப்புக்கும் உரியவரான காங்கிரஸ்காரர் அல்லாத ஒருவரை நான் சொன்னபடி பிரதமர் பொறுக்கியெடுத்து நியமனம் செய்திருந்தாராயின், அதை அவர்கள் வரவேற்றிருப்பர். தேசத்தின் சிறந்த நலனையும், ஆளும் கட்சியினரின் நலனையும் கருத்திற் கொண்டே இதை நான் கூறினேன்.

★

'இந்தோர், ஜய்பூர், குவாலியர் முதலிய இடங்களில் வகுப்புத் துவேஷங்கள் நீடிப்பது மிகுந்த விசாரத்துக்குரியது' என்று தொடங்குகிறது, 'ஹிந்து' தலையங்கம் (ஜூன் 20). எல்லா ராஜ்ய அரசாங்கங்களும் தமது கட்சியிடமே ஆட்சியை இருத்திக் கொள்வதில்தான் முனைந்துள்ளனவே அன்றி, நல்ல நிருவாகத்தில் அல்ல. வகுப்பு உணர்ச்சிகளைத் தூண்டி வோட்டுப் பெறுவது தலைவர்களுக்கு வசதியாக இருக்கிறது. தேர்தல்களில் கொள்கை அடிப்படையில் வோட்டுகள் போடப்படுவதில்லை என்பதும், வகுப்புப் பிரிவுகளின் அடிப்படையிலேயே வாக்குப் பதிவு நடக்கிறது என்பதும் நன்கு தெரிந்ததே. உண்மை ஜனநாயகம் ஏற்படுவதென்பது மெல்ல மெல்ல நடக்க வேண்டிய காரியம்.

ஒரு விஷயத்தை மறக்கலாகாது ; அதை மக்களுக்கும் நன்கு உணர்த்தி அவர்களது ஆதரவைப் பெற வேண்டும் — அதாவது, சட்டம் சமூக ஒழுங்குப்பாடு இவற்றை யாரும் மீறக் கூடாது. இவ்வுணர்ச்சியை நிலைநாட்டுவதே மத்திய உள்துறை இலாகாவின் முக்கியமான கடமையாக மதிக்கப்பட வேண்டும். ராஜ்ய சர்க்கார்களிடம் போலீஸ் துறையைக் குறித்த அதிகாரம் இருப்பதால் மத்திய சர்க்காரின் கடமை பாதிக்கப் படுகிறது.

நிர்வாக அதிகாரிகளுக்கு முன்பு இருந்த தன்னம்பிக்கை இப்போது போய் விட்டது. மந்திரிகளிடமிருந்தும், கட்சித் தலைவர்களிடமிருந்தும் யோசனை பெற்றே அவர்கள் நடக்கிறார்கள்.

✱

ரொடீஷியாவின் மீது கண்டிப்பான கட்டளைகள் பிறப்பிக்க வேண்டும் என்று ஐ. நா. பாதுகாப்புச் சபையில் இந்தியா தீரமுடன் அறைகூவியுள்ளது. படைபலம் உட்பட எல்லா சக்திகளையும் பிரிட்டன் பிரயோகித்து, ரொடீஷியாவை அடக்க வேண்டும் என்று இந்தியப் பிரதிநிதியின் ஆதரவு பெற்ற தீர்மானம் கோருகிறது. நான்கு ஆண்டுகளுக்குமுன் சுதந்திரப் பிரகடனம் செய்த ரொடீஷியாவில், இப்போது பொதுஜன வாக்கெடுப்பு நடக்கிறது.

இந்தியாவின் விவகாரங்கள் எப்படி நடப்பினும், வெளிநாடுகளில் உள்ள நம் பிரதிநிதிகள் உயர்ந்த கொள்கைகளில் பற்று வைத்து, தீரத்துடன் பேச வேண்டும்.

ஆயினும் தனது காலனி ஒன்றை எதிர்த்துப் போரிடும் யோசனையை பிரிட்டன் ஏற்காது என்பதை இந்தியாவின் வெளி விவகார இலாகா உணரவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும்.



## ஆசாரியர் அருள்வாக்கு

பரமேசா ! தேவர்களின் திவ்விய பண்டபங்களும் அடியார்களின் மலர் மனமும் இருக்க, நீ மலைப் பாறைகளில் நாட்டியமாடக் காரணம் என்ன ? நான் ஒருவன் பிறக்கப் போகிறேன்; என் மனம் பாறுங்கல்லாக இருக்கும் ; இந்தப் பாறுங்கல்லிலும் நர்த்தனம் புரிய வேண்டும் என்று முன்கூட்டியே நீ இரு உள்ளம் கொண்டதால்தானே, அதற்கு ஒத்திகைபாகக் கட்டாந் தரையில் நட்டம் பயின்றாய் ?





# வைத்தீசுவரன் வைபவம்

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான்

**வை**த்திசுவரன் கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ வைத்தியநாதப்பெருமானை ஜடாயு, இருக்வேதம், முருகப் பெருமான், சூரியன் ஆகியோர் பூசித்தமையால்தான் இத்தலத்துக்குப் புள்ளிருக்கு வேளூர் என்னும் பெயர் ஏற்பட்டது. இவர்களுள் முருகன் இங்கு ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர் என்று போற்றப் படுகிறார். இவரைப் பக்தர்கள் 'முத்தையா' என்றே அன்புடன் அழைப்பார்கள். இச் செல்வமுத்துக்குமாரர் ஸ்ரீ வைத்தியநாதரை நாடோறும் வழிபடும் ஐதிகம் உஷத் காலத்திலும், உச்சிக்காலத்திலும் இன்றும் நடைபெற்று வருகிறது.

சூரியன் பூஜை செய்யும் ஐதிகம் ஒவ்வொரு ஆண்டும் புரட்டாசி மாதம் 19, 20, 21-ஆம் நாட்களிலும், மாசி மாதம் 19, 20, 21-ஆம் நாட்களிலும் நடைபெறுகிறது. ஸ்ரீ வைத்திய நாதர் மேற்கு நோக்கிய சன்னிதானமாக எழுந்தருளியுள்ளமையால் மேல் குறிப்பிட்ட ஆறு நாட்களிலும் மாலை ஐந்தரை மணி அளவில் நடைபெறுகிறது. சுவாமி எழுந்தருளியுள்ள மூலஸ்தானத்திலிருந்து ஒரு பர்லாங்கு தூரம் இடைவெளியில்லாத மண்டபங்கள் இருந்தும், சூரிய ஒளிக் கதிர்கள் இறைவன் மீது பட்டுப் பூசிப்பது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

இவ்வாலயத்தில் பூஜைகள் காமிக ஆகம விதிப்படி ஆறு காலங்கள் நடைபெறுகின்றன. பங்குனி உத்தரப் பெருவிழா இங்கு சுவாமிக்கு நடத்தப்பெறும் "பிரம்மோற்சவம்" ஆகும். இவ்விழாவில் ஐந்தாந் திருநாளில் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி, ஸ்ரீ வைத்தியநாதரைப் பூசித்துச் செண்டு பெறும் ஐதிகம் நடத்தப்படுகிறது. முத்தையாவுக்குத் தை மாதம் திருவிழா நடைபெறுகிறது. கடைசிச் செவ்வாய்க்கிழமை தீர்த்தவாரி நடைபெறும். ஐப்பசி மாதம் கந்தஷஷ்டி விழாவும் முத்தையாவுக்குச் சிறப்பாக நடைபெறுகிறது. அம்மை ஸ்ரீ தையல்நாயகிக்கு ஆடிப்பூர உற்சவமும், நவராத்திரி விழாவும் சிறப்பாக நடத்தப்படுகின்றன.

பிரம்மோற்சவத்தில் சுவாமி வலப்பக்கமும் அம்பாள் இடப்பக்கமும் நடுவில் முத்தையாவும் எழுந்தருளி சோமாஸ்கந்தர் அமைப்பில் திருவீதி உலா வரும் காட்சி இத்தலத்தின் தனிச் சிறப்பு ஆகும்.

இக்கோயிலின் சொத்துக்கள் எல்லாம் ஸ்ரீ வைத்தியநாதர் பெயரிலேயே இருந்தாலும்,

சிறப்பெல்லாம் ஸ்ரீ முத்தையாவுக்குத்தான். ஸ்ரீ வைத்தியநாதரும், ஸ்ரீ தையல் நாயகியும் தமது செல்வக் குமாரனைப் போற்றும் முறையும், ஸ்ரீ முத்தையா அம்மையப்பரிடம் நடந்து காட்டும் பணிவும் அனைவரும் தரிசித்து மேற்கொள்ளத்தக்கனவாகும்.

முத்தையா புறப்படுவதென்றால் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகா சந்நிதானமோ அல்லது அவர்கள் பிரதிநிதிகளான கட்டளைத்தம்பிரான் சுவாமிகளோ உடன் இருக்க வேண்டும். முத்தையா கிருத்திகை தோறும் அபிஷேகம் கொள்வதற்குச் சந்தனக் குழம்பு மண்டபத்துக்கு எழுந்தருளுவார். நடைபாவாடை விரித்து அதன் மீது பவனி வரும்போது மகா சந்நிதானம் அல்லது கட்டளை சுவாமிகள் கைகூப்பிய வண்ணம் திரும்பாமல் முத்தையாவைத் தரிசித்தபடி பின் அடியிலேயே நடந்து வருவதும், முத்தையா சுவாமி சந்நிதியில் நின்று சுவாமியிடம் உத்தரவு பெற்றும், அம்பாள் சந்நிதியில் நின்று அம்பாளிடம் உத்தரவு பெற்றும் மண்டபத்துக்கு எழுந்தருளும் காட்சியும் இரவில் மீண்டும் முத்தையா உள்ளே யதாஸ்தானத்துக்கு எழுந்தருளும்போது, அம்பாள் சந்நிதியில் முத்தையாவுக்குப் பால் நிவேதனம் செய்யும் காட்சியும் உள்ளத்தைத் தொடுவன.

கிருத்திகை தோறும் பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் மூன்று மணி நேரம் ஒன்றுகூடி விருந்து அபிஷேக ஆராதனை









1. செல்வ முத்துக்குமாரசுவாமி நவரத்ன அங்கியுடன் கிருத்திகை அலங்காரம்.
2. வைத்தீசுவரன் ஆலய கோபுரம்
3. அங்காரகன். 4. சடாயு. 5. கண்ணாடிப் பல்லக்கு.
6. சித்தாமிர்தத் தீர்த்தம்.

படங்கள் : என். ராமகிருஷ்ணு

'பாபு நே கஹா தா' என்றபடத்தில் 'மேக்-அப்' ஏதும் இன்றிப் பன்னிரண்டு நிமிட நேரம் நடித்திருக்கிறார் மொரார்ஜி தேசாய். ''நான் நன்றாக நடித்தேன். 'ரீ-டேக்' தேவைப்படவேயில்லை'' என்றார் மொரார்ஜி.

-- டைம்ஸ் ஆப் இந்தியாவிலிருந்து ''கேன்னி''



களைத் தரிசிப்பதும் இத்தலத்தின் தனி விசேஷமாகும். பகலில் பன்னிரண்டு நாழிகை வரை கிருத்திகை இருந்தால் அன்றுதான் இத்தலத்தில் கிருத்திகை விழா நடைபெறும். அபிஷேகம் காலையில் பத்து மணிக்குத் தொடங்கப் பெற்றுப் பகல் ஒரு மணி வரை நடைபெறும்.

கிருத்திகையில் முத்தையாவுக்கு அபிஷேகிக்கப்படும் குழம்பைப் பெற்றவர்கள் அடுத்த கிருத்திகை வரையில் பருகிப் பயன் பெறுகின்றனர். புத்திர சந்தானம் இல்லாதவர்களுக்குப் புத்திரப் பேறு வாய்க்கப் பெறுவதால் சந்தனக் குழம்பைச் ''சந்தானக் குழம்பு'' என்றும் போற்றுகின்றனர்.

இங்கு அர்த்தஜாம பூஜை முதலில் முத்தையாவுக்குத்தான் நடைபெறும். இதைப் புழுக் காப்பு தரிசனம் என்று சொல்வார்கள். இது மிகவும் முக்கியமானது. இதைப் பலரும் நியதியாகத் தரிசித்துப் பலனடைகிறார்கள். புனுகு, ஜவ்வாது, நேத்திரப்பிடி என்னும் சந்தனப்பிடி இவற்றை முத்தையாவுக்குச் சாத்துவார்கள். நேத்திரப்பிடி சந்தனம் மருந்தாகவும் பயன்படுகிறது.

அங்க சந்தானத் தீர்த்தத்தில் உள்ள மண்ணை எடுத்து சித்தாமிர்தத் தீர்த்தம் கலந்து உளுந்தளவாக உருட்டி அம்மை பதத்தில் வைத்து அர்ச்சித்த மண்ணுருண்டை 'மருந்து' என்பதாக இத்தலத்தில் விநியோகிக்கப்படுகிறது. ''வந்த வந்த பேர்களுக்கு மண் மருந்து அளிக்கிறீர் வாயிலே மண் போட்டு வாங்குவர் காண் அம்மானை'' என்ற 'புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகத்' தொடர்களால் இவ்வுண்மையை நன்கு தெளியலாம்.

ஸ்தல விருட்சம் வேப்ப மரம். இது கிருத யுகத்தில் கடம்ப மரமாகவும், திரேதா யுகத்தில் வில்வ மரமாகவும், துவாபர யுகத்தில் மகிழ மரமாகவும், இக்கலி யுகத்தில் வேப்பமரமாகவும் மாறி வந்துள்ளது என்பர். சித்தாமிர்தத் தீர்த்தமும் ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொரு பெயருடன் விளங்கியது என்பர். சதானந்த முனிவரின் சாபத்தால் இன்றும் பாம்பும் தவளையும் இத்தீர்த்தத்தில் வசிப்பதில்லை. பதினெண் சித்தர்களுள் ஒருவரான தன்வந்திரி இத்தலத்தில் அடக்கமாகியுள்ளார் என்பதாகப் பெரியோர்கள் கூறி வருகின்றனர்.

இக்கோயில் தமிழகத்திலும் பிற மாநிலங்களிலும், கடல் கடந்த இலங்கை, மலேயா, தென்னாப்பிரிக்கா முதலிய தேசங்களிலும் உள்ள மக்களுக்குக் குலதெய்வக் கோயிலாக விளங்குகிறது. அவரவர்களும் பிரார்த்தனை செய்து கொண்டு காணிக்கை செலுத்தி வருகின்றனர். முகத்திலும், உடம்பிலும் பரு அல்லது கட்டிகள் ஏற்பட்டால் மிளகு, உப்பு, கடுகு, வெல்லம் இவற்றை வாங்கிச் சந்நிதியில் சேர்ப்பிப்பதாக வேண்டிக்கொள்கிறார்கள். ஒரு மாதத்துக்குள் பருவோ, கட்டியோ மறைந்து விடுகிறது. உடலில் எந்தவிதமான நோய்கள் வந்தாலும் அதற்கேற்றபடி பிரார்த்தனை செய்து கொண்டு அடிப் பிரதட்சணம், அங்கப் பிரதட்சணம் செய்து, நோய்களைப் போக்கிக் கொள்ளுகிறார்கள். கருச் சிதைவு ஏற்படும் தாய்மார்களும், வயிற்றுக் கோளாறு உள்ள ஆடவர்களும் சுவாமி சந்நிதியில் படுத்துக்கொண்டு வயிற்றில் மாவிளக்குப் போட்டுப் பயனடைகிறார்கள்.

யாத்ரிகர்கள் வசதிக்காக விடுதிகள் கட்டப்பட்டுள்ளன. தேவஸ்தானச் சார்பில் அனாதைக் குழந்தைகள் உண்டியும், உறையுளும் பெற்றுப் படித்து வருகின்றனர். அர்ச்சகர் பிள்ளைகளுக்குப் பயிற்சி அளிக்க வேத சிவாகம பாடசாலையும், ஓதுவார்களைத் தயார் செய்யத் தேவாரப் பாடசாலையும் நடத்தப்படுகின்றன. ஒவ்வொன்றிலும் 25 மாணவர்கள் உண்டியும், உறையுளும் பெற்றுப் பயின்று வருகின்றனர். இலவசமாகச் சித்த மருத்துவ இல்லம் நடத்தப்படுகிறது. நூற்றுக் கணக்கான ஏழை மக்கள் பயனடைகின்றனர். மூலிகைத் தோட்டம் அமைத்து மருந்துச் செடிகள் வளர்க்கப்படுகின்றன. பள்ளியில் பயிலும் மாணவர்கள் நூறு பேருக்கு ஆலயத்தில் மதிய உணவு அளிக்கப்படுகிறது.

இவ்வாலயத்தில் ஐந்தாண்டுகளாகத் திருப்பணி நடைபெற்று வருகிறது. இதுவரை நான்கு இலட்சம் செலவில் இராஜ கோபுரங்கள், சுவாமி — அம்பாள், முத்தையா விமானங்கள் புதுப்பித்தும், பழுது பார்த்தும் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளன. இதுவரையில் கோயில் வருமானத்தைக் கொண்டே செய்யப்பட்டுள்ளது. மேலும் மூன்று இலட்சம் செலவில் திருப்பணிகள் நடைபெற வேண்டும். நாட்டின் பல பகுதிகளிலும் வாழ்ந்து வரும் இவ்வாலய பக்தர்களிடமிருந்து பொருளுதவி எதிர்பார்க்கப்படுகிறது.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகா சந்நிதானம் அவர்கள் தங்கள் ஆலயங்களுள் முதன்மையாக உள்ள இவ்வாலய மகா கும்பாபிஷேகத்தை உலக நலன் கருதி வேத சிவாகம முறைப்படி ஒருவகையான குறைவுமில்லாமல், நாட்டுக்கு ஓர் எடுத்துக்காட்டான கும்பாபிஷேகமாகச் செய்ய வேண்டும் என்று அல்லும் பகலும் இதே சிந்தனையுடையவர்களாயிருந்து வருகிறார்கள். ஜூலை 2ந் தேதி கும்பாபிஷேகம். ஆஸ்திக அன்பர்கள் திரவிய காணிக்கை செலுத்தியும் தரிசனம் செய்தும் ஸ்ரீ செல்வ முத்துக்குமார சுவாமி, ஸ்ரீ தையல்நாயகி சமேத ஸ்ரீ வைத்தியநாத சுவாமியின் திரு அருள் பெற்று உய்வராக!

# குடும்ப டால்கில் ஒரு தனிச்சிறப்பையே
# குடும்பத்தில் அனைவரும் எதிர்பார்க்கின்றனர்

ULKA-CTB-31 TA



சருமத்தை
மிருதுவாக்கி
அழகுபடுத்தும்
தன்மையை
எண்ணி
யிருக்கிறாள்
அவள்



அவனோ இதமும்,
புத்துணர்வும்
பெற வியர்வை
போக்கும் பவுடரை
விரும்புகிறான்



சுகந்த
நறுமணம்
சோபிதமான
வண்ணப்பெட்டி
இதுவன்றோ
இவர்களின்
தேவை




பினகா டால்கில்
அவர்கள் விரும்பும் அத்தனையும் அடங்கியுள்ளது

**பினகா—பிடித்தமான குடும்ப டால்க்**

C I B A Cosmetics

# ஷண்மத மகாநாடு — சம்மத மகாநாடு

சங்கரர் ஷண்மத மகாநாட்டில் கலந்து கொண்டு அருமையாக உரையாற்றிய அனைவருக்கும் பாராட்டுக்கள் உரியன. இவ்வுரைகளில் வெளியான முக்கியமான சில விஷயங்களை மட்டும் பார்ப்போம்.

## விநாயக விழா (ஜூன் 2)

காணபத்திய விழாவுக்கு ஆசி அனுப்பியிருந்த மோர்காம் கணபதி பீடமாகிய யோகிந்தர மடாதிபதிகள், கணபதியை ஷண்மத சமஷ்டி தெய்வமாகக் கருதுவதாகவும், ஸ்ரீ ஆதி சங்கரரை கணபதி வழிபாட்டின் கலியுக ஆசாரியராகக் கருதுவதாகவும் தெரிவித்திருந்தார்.

கணேச (பார்க்கவ) புராணத்தைவிடப் பழைமையானதும், சாரம் மிகுந்ததுமான முத்கல புராணத்துக்கு இது வரை தமிழாக்கம் இல்லை என்று ஸ்ரீ என்.முருகேசமுதலியார் தெரிவித்ததை ஆஸ்திக உலகம் கவனித்துக் குறையை நிவர்த்தி செய்ய வேண்டும்.

'சிறுத்தொண்டரின் காலத்தில் தான் கணபதி வழிபாடு தமிழ் நாட்டில் பரவியது என்பது சரியல்ல; 'கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை' என்ற மணிமேகலை வரியிலேயே கணபதி காக வடிவம் எடுத்துக் காவிரிக் கும்பத்தைக் கவிழ்த்த செய்தி உள்ளது' என்றார் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன்.

மகாராஷ்டிரத்தில் பிரிட்டிஷ் அடக்கு முறையின் போது கணேச சதுர்த்தி விழாவின் மூலமே லோகமான்ய திலகர் அம் மக்களுக்குச் சுதந்திர வேட்கை ஊட்டியதாக ஸ்ரீ எஸ். ஆர். டிகேகர் கூறினார்.

## முருக வழிபாடு (ஜூன் 3)

முருகன் எப்படிப் பலப் பல கோலம் கொண்டு பல்விதமான மக்களையும் ஈர்க்கிறான் என்பதைக் கச்சிதமாக எடுத்துக் காட்டினார் சோமு அவர்கள்.

முருகன் பிரம்மசாரி கார்த்திகேயனாக வடபுறத்தில் வழங்கப்படுவதற்கு ஆதாரங்களை எடுத்துக் காட்டினார் ஸ்ரீ சுநீதிகுமார் சாட்டர்ஜி. அழகர்களையே வங்கத்தில் 'கார்த்திக்' என்பார்களாம். வட இந்தியாவையும், தென் இந்தியாவையும், இலங்கையையும் இணைத்து வந்திருப்பவன் அவன் என்றார்.

## வைஷ்ணவம் (ஜூன் 4)

பக்தி மலையாக எழுந்தருளி, கனிவுப் பழமாக உதிர்த்துத் தள்ளினார் பிருந்தாவனத்து ஸ்ரீ புருஷோத்தம கோஸ்வாமிஜி.

உலகத்தின் எழிற் களஞ்சியங்களை தெய்வ லீலையாக ரசித்து, அழகுணர்ச்சி வழியே ஆண்டவனை அடைவதே ஆழ்வார்களின் வழி என்றார் பேராசிரியர் அ. சீநிவாச ராகவன்.

வெளி உருவங்களின் பூஜையில் தொடங்கும் பாஞ்ச ராத்திர ஆகமம், உள்ளத்தில் உறையும் ஈசனின் மானசிக பூஜையிலேயே முடிவதாக விளக்கினார் ஸ்ரீ பிரபாகர ஆப்டே.

ஸ்ரீமதி ஸாவித்ரா ஜெய்ஸ்வாலின் உரையின் முதற் பகுதியில் அறிவாராய்ச்சி அதிகமாகி விட்டதைச் சமன் செய்வது போலவே பிற்பகுதியில் சங்கரரின் விஷ்ணு பக்தி நன்கு வலியுறுத்தப்பட்டது. இதற்கு ஒரு பொருத்தமான தொடர்ச்சியாகச் சரணாகதியின் பெருமையை விளக்கினார் மகாவித்வான் ம. வீ. வேணுகோபாலப் பிள்ளை.

## சூரிய வழிபாடு (ஜூன் 5)

சூரிய வழிபாட்டைப் பற்றிப் பேச அதிகம் இராது என்று நினைக்கப் போக, அன்றுதான் இரவு பத்து மணி வரையில் புதிது புதிதாகப் பல அறிஞர்கள் கருத்துக்களைச் சொற்பெருக்காற்றினர்.

'மற்ற தெய்வங்கள் உண்டா இல்லையா என்று விவாதிக்கலாம்; சூரியனைப் பற்றி இந்த வாதத்துக்கே இடமில்லை' என்று ஸ்ரீ காயத்ரி பீடாதிபதிகள் ஆரம்பத்தில் கூறியவுடனேயே விழா களை கட்டிவிட்டது. வழிபாடு செய்யாதோருக்கும் உதயசூரியன் அடையாளமா யிருப்பதைப் பிற்பாடு ஸ்ரீ கி. வா. ஜ. கவிதையில் குறிப்பிட்டார்.

உடல் நிலை காரணமாக விழாவுக்கு நேரில் வர முடியாத தில்லி லெஃப்டினன்ட் கவர்னர் ஆதித்ய நாத் ஜா அழகிய சம்ஸ்கிருதத்தில் அனுப்பியிருந்த தலைமை உரையில், 'ஸௌர புராணம்' ஆதிசங்கரரை சூரியனின் அவதாரமாகவேகூறியிருப்பதைக் குறிப்பிட்டிருந்தார்.

வேதம் சூரியனைக் கட்டிப் பிடித்து வந்து கண் முன் காட்டுவதை விளக்கினார் அக்னிஹோத்திரம் ஸ்ரீ ராமாநுஜ தாதாசாரியர்.

உலகம் முழுவதும் பரவிய சூரிய வழிபாட்டு முறைகளை — ஆதியிலிருந்து இன்று வரை அது வளர்ந்த வகைகளை டாக்டர் வெ. ராகவன் எப்படித்தான் தொகுத்தாரோ என்று வியக்க வேண்டியதாயிற்று.

தென்னகத்தில் திருவனந்தபுரத்துக்கருகே திவாகரர் என்ற ஆசாரியர் தலைமையில் சூரியனையே பரம்பொருளாகக் கொண்டோர் வாழ்ந்ததாக டாக்டர்பராத்கர்தெரிவித்தார்.

அம்பிகையின் பரிவார தெய்வமாகவே ஆதி சங்கரர் சூரியனைப் போற்றுவதாகப் பேராசிரியர் கே. ஸ்ரீநிவாச ராகவன் தெரிவித்தார்.

## சாக்தம் (ஜூன் 6)

தோற்றத்திலேயே பராசக்தியின் அருள் கமழும் புதுக்கோட்டை புவனேசுவரி பீடாதிபர் ஸ்ரீ சாந்தாநந்த ஸ்வாமிகள் அம்பிகை விழாவன்று, 'ஆறு மதங்களும் இங்கு ஆதி சங்கரரை மையமாகக் கொண்டு ஒன்றுகூடினாற் போல், அம்மகானை மத்தியாகக் கொண்டு எல்லா சித்தாந்த ஆசாரியர்களின் மாபெரும் பிம்பங்களும் அவர்களின் அருளுரைகளும் பொறித்த பெரிய மண்டபம் சென்னையில் எழும்ப வேண்டும்' என்றார்.

வெள்ளைப் பொடிக் கோலத்துக்குச் செம்மண் இடுவது போன்ற சாமானியப் பழக்கங்களிலும்கூட வெள்ளைச் சிவமும் செம்மைச்













## வைஷ்ணவ விழா

(1) டாக்டர் டி. என். சுக்லா, ஸ்ரீ வில்லிபுத்தூர் அலங்கார பட்டாசாரியர், டாக்டர் பிரபாகர ஆப்டே.

(2) ஸ்ரீ புருஷோத்தம கோஸ்வாமிஜி (பிருந்தாவனம்).

(3) தலைமை உரை வாசிக்கிறார் ஸ்ரீ எம். அனந்தசயனம் அய்யங்கார்.

(4) மகா வித்துவான் வேணுகோபாலப் பிள்ளை.

(5) பிரவசனம் செய்த ஸ்ரீமான் எம்பார் விஜயராகவாச்சாரியார்.

(6) பேராசிரியர் அ. சி. ரா.

(7) ஸ்ரீ டி. எம். நாராயணசுவாமிப் பிள்ளை.















**சாக்தம்**

(1) புதுக்கோட்டை புவனேசுவரி பீடம் சாந்தானந்த சுவாமிகள் சாக்தம் தினத்தன்று பிரசன்னமாயிருந்ததோடு ஆசி உரையும் நிகழ்த்தினர்.

(2) பிரவசனம் செய்த சுகப்பிரும்மம் ராமஸ்வாமி சாஸ்திரிகள்

(3) ஸ்ரீ வி. வி. சுவாமி சாஸ்திரிகள்

(4) தேவி வழிபாட்டில் இரு பெண்மணிகள். ஸ்ரீமதிகள் ஜயகுமாரி பாஸ்கரன், வசுமதி ராமசுவாமி.







(6) காசி சம்ஸ்கிருத சர்வகலாசாலைத் துணைவேந்தர் ஸ்ரீ கௌரிநாத சாஸ்திரி தலைமை வகித்தார். விசேஷ உரை நிகழ்த்திய ரவீந்திர பாரதி உபஅத்யக்ஷி டாக்டர் ரோமா சௌத்ரியையும் காணலாம்.

(5) தமிழில் சிறப்புரை நல்கிய புதுவை நீதிபதி ஸ்ரீ மகராஜன்












### சைவ விழா

(1) காலைக் கூட்டத்தில் ஸ்ரீமான்கள் நீதிபதி பி. எஸ். கைலாசம், டாக்டர் வே. ராகவன், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம். (2) ஸ்ரீலஸ்ரீ மதுரை ஆதீனகர்த்தரவர்கள். (3) ஸ்ரீ ஜகதீஸ்வர சாஸ்திரிகள். (4) திருமுருக கிருபானந்த வாரியார். (5) வரவேற்புரை வழங்கிய ஸ்ரீ என். மகாலிங்கம். (6) டாக்டர் டி. எம். பி. மகாதேவன். (7) பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம் தீக்ஷிதர் பிரவசனம். (8) ஸ்ரீலஸ்ரீ தொண்டை மண்டலம் ஆதீனகர்த்தர் திருமுன்னர் புதுவை கவர்னர் தலைமை உரை நிகழ்த்துகிறார்.


















சக்தியும் பிணைந்திருப்பதைக் காட்டினார் பிரம்மஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரிகள்.

'சங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தது பற்றி ஐயம் கொள்ள அவசியமே இல்லை. அவர் அவைதிக மதங்களைக் களைந்து வைதிக மதத்தை நிலைநாட்டியதாக அனைவரும் ஒப்புக் கொள்கின்றனர். அப்படியானால் அவர் பாரத மக்கள் அனைவரையும் ஈடுபடுத்தும் ஆலய வழிபாடு, பூஜை முறை இவற்றை எல்லாம் இசைவித்து நிலைநாட்டித்தான் இருக்க வேண்டும். இதுதான் ஷண்மத ஸ்தாபனம்' என்று ஆணித்தரமாகக் கூறினார் டாக்டர் ராகவன்.

மாயை என்று தேவியைப் புறக்கணிக்காமல், அந்த மாயைக்கு மேம்பட்ட அன்பாகவும் அவளை ஆசாரிய சங்கரர் கண்டதாக ஒரு நெக்குருகும் வரலாற்றுத் துணுக்கை விளக்கினார் ரவீந்திர பாரதியின் உப அத்யக்ஷகி ஸ்ரீமதி ரோமா சௌத்ரி.

தமிழகத்தில் ஆதிமுதற்கொண்டு சக்தி வழிபாடு சிறந்து விளங்கியிருப்பதை அநுபவமும், ரசிக உணர்வும் ததும்பிய புதுவை நீதிபதி திரு மகராஜன் எடுத்துரைத்தார்.

அன்று தலைமை தாங்கிய காசி சம்ஸ்கிருத பல்கலைக் கழக உபஅத்யட்சகர் டாக்டர் கௌரிநாத சாஸ்திரி, சிந்தனையைக் கிளறிவிடும் ஒரு கருத்தைத் தெரிவித்தார். 'ஸ்ரீ ஆதி சங்கரர் தமது அத்வைத வேதாந்த நூல்களில் அறிவுப் பிழம்பான சைதன்ய வஸ்து ஒன்றே என்றும், அதுவே பரம்பொருள் என்றும் கூறுகிறார். அதில் சக்தி என்பவள் பரம்பொருளின் மாயா விலாசமே. ஆனால் அவரே துதி நூல்களில் சக்தியாகிய அம்பிகையையும் சிவனோடு சேர்த்துச் சைதன்ய வஸ்துவாகச் சொல்கிறார். அவ்வாறாயின் இரண்டு சைதன்யங்கள் இருக்க முடியுமா?' என்று வினவினார். இந்த வினாவின் மூலமே, அன்று சக்தி பெரிதா சிவம் பெரிதா என்ற ரீதியில் எழுந்த பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்து, அவ்விரண்டும் ஒன்றே என்பதையும் சொல்லாமல் சொல்லிவிட்டார்! 'ஞானியான சங்கரர் பெரும் பக்தராக இருந்திருக்க முடியுமா என்ற கேள்விக்கு இடமே இல்லை. ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரியார்களே இந்தக் கேள்விக்கு விடை' என்று அவர் கூறியதை மறக்க முடியாது.

## சைவம் (ஜுன் 7)

சைவ மகாநாடு இருகூட்டங்களாக நடந்தது. காலையில் ஸ்ரீலஸ்ரீ மதுரை ஆதீனகர்த்தரவர்கள் சைவத்தை விளக்கியதோடு, 'பூர்வ கர்மங்களுக்கு ஏற்ப மறு பிறவி அமைகிறது என்பதை ஒப்புக்கொள்ளாத மதங்கள், பிறப்பிலேயே மக்களுக்கிடையில் அறிவு நிலை, செல்வ நிலை இவற்றில் இருக்கும் மாறுபாடுகளை ஒருகாலும் விளக்க முடியாது. கர்ம விதியை ஒப்பாவிடில் கடவுள் பட்சபாதமாக உயிரினங்களைப் படைக்கிறார் என்றே ஏற்படும்' என்றார்.

சைவத்தின் லட்சணம் அன்பு என்பதை எடுத்துக் காட்டிய பிரம்மஸ்ரீ ஜகதீச்வர சாஸ்திரிகள், 'ஹிந்து' என்று நமக்குத் தரப்பட்ட பிற்காலப் பெயருக்கும் '**ஹிம்**சையை **தூஷிப்**பவர்' எனப் பொருள் கொடுத்தார்!

சைவத்தின் சாரமான அன்பை உணர்ச்சியுடன் பாங்குற விளக்கிய திருவாசகமணி பாலசுப்பிரமணியம் அவர்கள், புலால் மறுத்தலைச் சிவநேயர்கள் தலையாய நெறியாகக் கொள்ள வேண்டும் என்று அடித்துக் கூறினார்.

மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகர், பழமையான ஆசாரங்களும் கோட்பாடுகளுமே உருவகமாகச் சிவ தர்மத்தை விளக்கினார்.

சைவம் என்பதை ஒரு குறுகிய துறையாக எண்ணாமல், எல்லாம் தழுவும் சமயம் என்ற உணர்ச்சியிலேயே பார்க்க வேண்டும் என்று கூறினார் தலைவர் நீதிபதி கைலாசம் அவர்கள்.

அன்று மாலை விழாவுக்குத் தலைமை வகித்த புதுவை கவர்னர் ஜட்டி சைவத்தில் எத்தனை எத்தனை பிரிவுகள் இருந்தன என்பதை விளக்கினார். அவர் கூறிய விவரங்கள் வியப்பளித்தது மட்டுமல்ல; 'மதச்சார்பின்மை' படைத்த ஒரு சர்க்கார் தலைவர் மத விஷயத்தில் இவ்வளவு ஈடுபாடு கொண்டு தைரியமாகப் பேசினாரே — அதுவே வியப்புத்தான்!

யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி ரத்தின நவரத்தினம், கருத்துச் செறிவும் உருக்கமும் நிறைந்த ஆங்கிலச் சிறப்புரையில் சிவநெறியின் அன்பு மகிமையை விளக்கினார். மகாவித்வான் காஞ்சி வஜ்ரவேல் முதலியார் பட்டுக் கத்தரித்தாற்போல் சைவத்தின் அடிப்படைகளை எடுத்தியம்பினார். அன்று திருமுருக கிருபானந்தவாரியார் ஸ்ரீ காமகோடிப் பெரியவாளையே சிவமாக மக்கள் முன் காட்டி, அவர்களை உலுக்கி விட்டார். ம. பொ. சி. அவர்கள் அரசியலை விட்டு ஆன்மிகத்துக்குத் திரும்பிவிடத் தம் மனம் விழைவதாகச் சொன்னபோது எழுந்த கரக்கம்பம், அவரது கருத்தை மேலும் வலிவாக்கும் என நம்பலாம்.

## தொகுப்பு (ஜுன் 8, காலை)

சைவ விழாவோடு அறு சமயங்கள் பற்றிய பேச்சுக்கள் பூர்த்தியாயின. மறுநாட் காலை இப்பேச்சுக்களின் சாரத்தைத்தொகுத்து ஒரு சொற்பொழிவு வழங்கினார் டாக்டர் டி. எம். பி. மகாதேவன். ஷண்மதங்களில் எந்தெந்த மதத்தை எந்தெந்த இடத்தில் யாராருடன் வாதிட்டு, சங்கரர் நிலைநாட்டினார்; அவற்றில் சங்கரர் செய்த சீர்திருத்தங்கள் யாவை என்பதையெல்லாம் இவ்வுரையில் தெரிந்து கொள்ள முடிந்தது.

அன்று ஸ்ரீ காமகோடி ஜகத்குருவின் உபன்யாசம் ஒன்று ஒலிபரப்பப்பட்டது. 'ஷண்மத விழா பேஷாக நடந்தது' என்று பாராட்டி விட்டால் போதாது; ஆசாரிய சங்கரரையோ, காமகோடி பெரியவாளையோ வாயாரப் பாராட்டி விட்டால் மட்டும் போதாது; அவரவரும் வாழ்க்கையில் வைதிக நெறிகளைப் பின்பற்றுவதே முக்கியம்; சிவ பஞ்சாட்சரம், விஷ்ணு அஷ்டாட்சரம்— அல்லது குறைந்த பட்சம் சிவ நாமம், ராம நாமம் — இவற்றையாவது அனைவரும் தினமும் மனனம் செய்ய வேண்டும்; வேதாப்பியாசத்துக்கு உரியவர்கள் காயத்ரியை விடக் கூடாது. விழாக்களும், வைபவங்களும் எடுப்பதை விட இவ்வாறு ஒருசில அநுஷ்டானங்களையேனும் அனைவரும் பின்



''கல்கி'' உதவி ஆசிரியர் ஸ்ரீ ஸோமாஸ்கந்தன் அவர்களின் குமாரத்தி சௌ. பாலாவுக்கும், திருச்சி எஸ். ராமச்சந்திர ஐயர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ஆர். ராமநாதனுக்கும் 18-5-69 அன்று சென்னை மயிலாப்பூர், வேங்கட ரங்க நாயகி கல்யாண நிலயத்தில் அதிவிமரிசையாக விவாகம் நடந்தேறியது. அதே தினத்தில், ஸ்ரீ ஸோமாஸ்கந்தன் அவர்களின் குமாரன் **பாலசந்திர**னுக்கு உபநயனமும் நடைபெற்றது. மணமக்களுக்கும் வடுவுக்கும் பரிசுப் பொருள்களும் வாழ்த்துக்களும் ஏராளமாக வந்து குவிந்தன. வாழ்க மணமக்கள்!

பற்றினால்தான் நம் மதம் வாழும் — என்பதை உணர்த்தியது ஜகத்குருவின் உபந்நியாசம். 'பிற மதம் தழுவியவர்களை மீண்டும் ஹிந்துக்களாக்க விரும்புகிறார்கள். நான் நினைக்கிறேன்: அவர்கள் வேறு மதத்தில் இருக்கு மளவுக்கு அந்த மத ஆசாரங்களை யாவது கடைப்பிடிக்கிறார்கள்; நம் மதத்துக்குத் திரும்பி விட்டால் அவர்களுக்கு எந்தச் சமய ஒழுக்கமும் இராதே' — இவ்வாறு ஸ்ரீ பெரியவாள் சொன்னது நம்மை ரத்தக் கண்ணீர் வடிக்க வைக்க வேண்டும்.

ஷண்மதத் தொகுப்பு நாளன்று ஆயிரமாயிரம் ஏழை மக்களுக்கு நெய் சொட்டச் சொட்டச் சர்க்கரைப் பொங்கலும், சாம்பார் சாதமும் வழங்கப்பட்டது. அது ஏழைகளின் உதரத்தை நிரப்பியதோடு பகவத் பாதரின் உள்ளத்தையும், காமகோடிப் பெரியவாளின் உள்ளத்தையும் நிரப்பி யிருக்கும்.

## ஸ்ரீ ராமபிரான் (ஜூன் 8, மாலை)

ஷண்மதப் பிரதான தெய்வங்களைச் சேராவிடினும், மக்களை மிகவும் ஈர்த்துள்ள அவதாரங்களான ராமனைக் குறித்தும் கண்ணனைக் குறித்தும் ஜூன் 8, 9 தேதிகளில் உரைகள் நிகழ்த்தப்பட்டன.

வால்மீகி, துளசி, கம்பன், எழுத்தச்சன், ஸ்ரீ சங்கரர் ஆகியோர் கண்ட ராமனை அவையோர் கண்டனர்.

சமர்த்த ராமதாஸ் சுவாமிகளின் வைராக்கியமும், ராம பக்தியும் ஸஜ்ஜன்காட் ராமதாஸ் மட உபதலைவர் அன்னாபுவா ராமதாஸியின் உரையிலிருந்து தெளிவாயிற்று.

ராமன் எப்படி இன்றும் ஆபத்திலே வந்து பக்கத்திலே நின்று இடர் களைகிறான் என்று அநுபவ பூர்வமாக நீதிபதி என். கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார் அவர்கள் நெஞ்சுருகும்படி கூறினார்.

தலைமை வகித்த அண்ணங்கராசாரியர் ஸ்வாமி — 'பிரதிவாதி பயங்கரம்'. ஆனால் பிரதிவாதம் செய்யாதவர்களுக்குப் பரம மதுரமானவர்.

## ஸ்ரீ கிருஷ்ணன் (ஜூன் 9)

பூர்ணாவதாரக் கண்ணன் விழாவுடன் மாநாடு பூர்த்தி ஆயிற்று. அன்று உடுப்பி ஸ்ரீ பண்டார்கரே சுவாமிகளும், தலைவர் ராஜாஜியும், குருவாயூர் அஞ்சம் நாராயண நம்பூதிரிகளும், ஸ்ரீ செங்காலிபுரம் தீக்ஷிதரும் பக்தியை வலியுறுத்திப் பேசியது அத்தனையும் அநுபவ வாக்காதலின், ஆழமாக மனத்தில் பதிந்தன. சங்கரர் — சுகர் — லீலாசுகர் — ஜயதேவர் — போதனா — சைதன்யர் — மீரா ஆகியோரின் கிருஷ்ணானந்தத்தைப் பேச்சாளர்கள் விவரித்தனர். மதுரை பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு தெ.பொ.மீ. கண்ணனை அறிவைவிட இதயத்துக்கு இதமானவனாகச் சித்திரித்தார்.

அந்த அன்பில் மக்களை விடிய விடிய அமிழ்த்தி ஆடிப் பரவசம் கொள்ளச் செய்தனர் புதுக்கோட்டை பிரம்மஸ்ரீ கோபால கிருஷ்ண பாகவதரவர்களின் பஜனைக் கோஷ்டியினர். இது புத்தி விழாவல்ல; பக்தி விழாவே என்பதற்கு அன்றைய சங்கீர்த்தனமே அத்தாட்சி.

இதற்கு முன் இரவுகளில் ஸ்ரீமான்கள் பாலகிருஷ்ண சாஸ்திரிகள், கொத்தமங்கலம் சுப்பு, எம்பார் விஜயராகவாச்சாரியார், தூப்புல் லக்ஷ்மீ நரசிம்மன், சுகப்பிரம்மம் ராமசுவாமி சாஸ்திரிகள், சேங்காலிபுரம் அனந்தராம தீட்சிதர், கோமல் சேஷாத்ரி அய்யங்கார் ஆகியோர் மூட்டிய பக்திப் பொறிகள் பூர்த்தி தின பஜனையில் கொழுந்து விட்டுப் பிரகாசித்தன எனலாம்.

'பக்தியின் ஊற்றுக் கண்கள் நம் மக்களிடம் வற்றி விடவில்லை; மண்ணை அரித்தெடுத்தவுடன் அடியிலிருந்து நீர் பிரவகிப்பது போல், அவர்களது உள்ளத்தைச் சிறிது அகழ்ந்தால் பக்தி பெருகவே செய்கிறது' என்பதற்குச் சான்றாக அமைந்தவை இம்மகாநாட்டில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் வழங்கிய இரு இன்னிசை நிகழ்ச்சிகள். தொடக்க தினத்தன்று, ஷண்மத தெய்வங்களைக் குறித்த ஆசாரிய சங்கரரின் சுலோகங்களையும், உத்தம வாக்கேயகாரர்களின் கிருதிகளையும், ஆசாரியர்களின் மீதான துதிகளையும் உள்ளம் குழைந்து இசைத்தார் ஸ்ரீமதி எம். எஸ். மகாநாட்டின் நோக்கமான சமரசமும், பக்தியும் இந்த நிகழ்ச்சியிலேயே அதன் பூரணத்துவத்தை எய்திப் பிரகாசித்தன என்று நிச்சயம் கூறலாம். என்றுமே பக்தியில் திளைத்த ஸ்ரீமதி எம். எஸ்ஸின் உள்ளம், விசேஷமாக பகவத்பாதருடனும், ஸ்ரீ காஞ்சி ஜகத்குருவுடனும் தொடர்பு கொண்ட இவ்வைபவத்தில் அப்படியே நைந்து நெகிழ்ந்து உருகிவிட்டது. அந்த உருக்கத்தில் ஆயிரமாயிரம் மக்களும் கரைந்ததைக் குறிப்பிட வேண்டும். தொடக்க தினத்தன்று பக்கவாத்தியங்களுடன் பாடிய ஸ்ரீமதி எம்.எஸ்., ஷண்மத சாராம்சம் எடுத்துரைக்கப்பட்ட காலையில், பக்கவாத்தியங்கள் இன்றி, ஸ்ரீமதி ராதா விசுவநாதனின் குரல் மட்டும் இழைந்து கொடுக்கச் சுமார் முக்கால் மணி ஆசாரியர்களுக்கு ஆத்ம நிவேதனம் செய்து இசைத்த போது சபையினர் பக்தியில் கட்டுண்டு வாஸ்தவமாகவே கண்ணீர் உகுத்தனர். அந்த முக்கால் மணியில் அலைமோதிய தெய்விக அநுபவத்தைப் பக்தர்கள் ஒரு நாளும் மறக்க முடியாது.

பஞ்சாபிலிருந்து ஸ்ரீ டி. என். கக்லா, தில்லியிலிருந்து ஸ்ரீ லோகேஷ் சந்திரா, ஸ்ரீமதி மோனிகா வர்மா, உத்தரப் பிரதேசத்திலிருந்து ஸ்ரீ கோஸ்வாமிஜி, ஸ்ரீ கௌரிநாத சாஸ்திரி, வங்காளத்திலிருந்து ஸ்ரீ சுநீதி குமார் சாட்டர்ஜி, ஸ்ரீமதி ரோமா சௌத்ரி, ஸ்ரீ கோவிந்த கோபால் முகர்ஜி, பிஹாரிலிருந்து ஸ்ரீமதி ஸுவீரா ஜய்ஸ்வால், மகாராஷ்டிரத்திலிருந்து சர்வஸ்ரீ போத்தார், டிகேகர், பராத்கர், ஈழத்திலிருந்து ஸ்ரீமதி ரத்தின நவரத்தினம் — என்றிப்படி நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அறிஞர்கள் குழுமியதால் இது அகில பாரதமும் ஆதி சங்கரரின் பக்திப் பணியை, ஷண்மத ஸ்தாபனத்தைப் போற்றிய விழாவாயிற்று.

விழாவை ஒட்டி வெளியாகும் சிறப்பு மலர் உலக நாடுகளிலுள்ள பேராசிரியர்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்படுவதன் பயனாக, சர்வதேச ரீதியிலும் சங்கரரின் ஒப்பற்ற பக்தித் தொண்டு உரிய அளவுக்குப் புரிந்து கொள்ளப் பெறும் என நம்புவோமாக!

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி



## முப்பத்துநான்காம் அத்தியாயம்

## அநுராதபுரம்

சூரியன் அஸ்தமனமாகும் சமயத்தில் அவர்கள் அநுராதபுரத்தை அணுகினார்கள். இலங்கைத் தீவின் தொன்மை மிக்க அத் தலைநகரத்தைச் சற்றுத் தூரத்திலிருந்து பார்த்தபோதே வந்தியத்தேவன் அதிசயக் கடலில் மூழ்கிப் பேசும் சக்தியை இழந்தான். அநுராதபுரத்தைப் பற்றி அவன் பலர் சொல்லக் கேள்விப்பட்டதுண்டு. அந் நக





ரைப் பற்றி அவர்கள் செய்த வர்ணனைகளிலிருந்து அதன் தோற்றம் இப்படி இருக்குமென்று அவன் கற்பனை செய்து பார்த்ததும் உண்டு. ஆனால் அவனுடைய கற்பனைகளையெல்லாம் அந்த மாநகரம் மிஞ்சியதாயிருந்தது. அம்மம்மா! இதன் மதில் சுவர்தான் எத்தனை பெரியது? எப்படி இருபுறமும் நீண்டு கொண்டே செல்கிறது? எந்த இடத்திலே அச்சுவர் வளைந்து திரும்புகிறது என்று தெரிந்து கொள்ளவும் முடியவில்லையே? மதில்சுவருக்கு உள்ளே எத்தனை எத்தனை கோபுரங்களும் ஸ்தூபங்களும் மண்டபச் சிகரங்களும் தலை தூக்கிக் கம்பீரமாக நிற்கின்றன? இவ்வளவும் ஒரே நகரத்துக்குள்ளே, ஒரே மதில் சுவருக்குள்ளே, அடங்கியிருக்க முடியுமா? காஞ்சி, பழையாறை, தஞ்சை முதலிய நகரங்களெல்லாம் இந்த மாநகரத்தின் முன்னே எம்மாத்திரம்? அசோக சக்கரவர்த்தியின் காலத்தில் பாடலிபுத்திரமும் விக்ரமாதித்தனின் ஆட்சியில் உஜ்ஜயினி நகரமும் கரிகால் வளவன் காலத்தில் காவேரிப்பட்டினமும் ஒருகால் இந்த நகரத்தைப் போல் இருந்திருக்கலாம்! தற்காலத்தில் உள்ள வேறு எந்தப் பட்டணத்தையும் இதற்கு இணை சொல்ல முடியாது!....

மதில் சுவரும் அதன் பிரதான வாசலும் நெருங்க நெருங்க, நகரை நோக்கிச் செல்வோரின் கூட்டம் அதிகமாகி வந்தது. தமிழர்களும் சிங்களவர்களும் பிக்ஷுக்களும் இல்லறத்தாரும் ஆண்களும் பெண்களும் சிறுவர் சிறுமிகளும் பெருங் கூட்டமாகச் சென்றார்கள். எல்லாரும் நேர்த் திருவிழாவுக்குச் செல்கிறவர்களைப் போல் குதூகலமாகச் சென்றார்கள். அவர்களில் ஒரு சிலர் நமது பிரயாணிகள் மூவரையும் கவனிக்கவும் சுட்டிக் காட்டவும் தொடங்கினார்கள். இந்தக்



கண்டதும் பொன்னியின் செல்வர் மற்ற இருவருக்கும் சமிக்ஞை செய்து விட்டு, இராஜ பாட்டையிலிருந்து விலகிக் குறுக்கு வழியில் சென்றார். மரங்களால் மறைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய செய்குன்றத்தின் அடிவாரத்தில் வந்து குதிரையை நிறுத்தினார். பின் தொடர்ந்து வந்த இருவரையும் பார்த்து, "குதிரைகள் வெகு தூரம் வந்திருக்கின்றன. சற்று நேரம் இளைப் பாறட்டும். நன்றாக இருட்டியபிறகு நகருக்குள் போவோம்!" என்றார்.

குதிரைகள் மீதிருந்து மூவரும் இறங்கி ஒரு கற்பாறை மீது உட்கார்ந் தார்கள்.

"இவ்வளவு கூட்டமாக ஜனங்கள் போகிறார்களே? இன்றைக்கு இந்த நகரத்திலும் ஏதாவது உற்சவமோ?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"இந்த நாட்டில் நடக்கும் திருவிழாக் களுக்குள்ளே பெரிய திருவிழா இன் றைக்குத்தான்!" என்றார் இளவரசர்.

"ஈழ நாட்டில் ஏதோ யுத்தம் நடக் கிறது என்று கேள்விப்பட்டேன். இங்கே வந்து பார்த்தால் ஒரே உற்சவமாயிருக் கிறதே!" என்றான் வந்தியத்தேவன்.

"பழையாறையில் ஸ்ரீ ஜயந்தி உற்ச வம் நடந்தது என்று நீர் சொல்ல வில்லையா ?"

"ஆமாம்; ஆனால் பழையாறை சோழ நாட்டில் இருக்கிறது...."

"அநுராதபுரம் ஈழ நாட்டில் இருக் கிறது. அதனால் என்ன? சோழ நாட்டி லும் சுந்தரசோழ சக்கரவர்த்தியின் ஆட்சிதான்; ஈழ நாட்டிலும் அவ ருடைய செங்கோல் ஆட்சிதான்....!"

"ஆனால் இந்த நாட்டில் இன்னும் பகைவர்கள் இருக்கிறார்களாமே?...."

"பகைவர்கள் எங்கேயோ இருக் கிறார்கள். அதற்கு, இங்குள்ள ஜனங்கள் என்ன செய்வார்கள்? போர்க் களத்தில் போர் நடக்க வேண்டியது தான்; ஊர்ப்புறத்தில் உற்சவமும் நடக்க வேண்டியதுதான்!... திருமலை! நீ என்ன சொல்கிறாய்?" என்றார் இளவரசர்.

"இங்கே வெளிப் பகைவர்கள் இருந் தால் அங்கே உட்பகைவர்கள் இருக் கிறார்கள். வெளிப் பகைவர்களைக் காட் டிலும் உட்பகைவர்களே அபாயமான வர்கள். ஆகையால் இளவரசர் இந்த நாட்டிலேயே உற்சவமும் யுத்தமும் நடத்திக் கொண்டிருப்பதே நல்லது என்று அடியேன் சொல்லுகிறேன்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அழகாய்த் தானிருக்கிறது. வெளிப் பகைவர்களைவிட உட் பகைவர்களே அபாயகரமானவர்கள் என்றால், அங்கே தானே நம் இளவரசர் இருக்க வேண் டும்? அபாயம் அதிகம் உள்ள இடமே வீர புருஷர்கள் இருக்க வேண்டிய இடம் அல்லவா?" என்றான் வந்தியத்தேவன்.

"வீரம் என்றால், அசட்டுத்தனமாகச் சதிகாரர்களிடமும் கொலைகாரர்களிட மும் போய் அகப்பட்டுக் கொள்ள வேண்டும் என்று அர்த்தமா? வீராதி வீரனாகிய நீ அங்கே போய் அப்படி அகப்பட்டுக் கொள்வதுதானே? எதற் காகத் தப்பி ஓடி வந்தாய்?" என் றான் திருமலை.

"போதும்! போதும்! நீங்கள் ஒரு யுத்தம் இங்கே ஆரம்பித்துவிட வேண் டாம்!" என்று அருள்மொழிவர்மர் சமாதானம் செய்வித்தார்.

இருட்டிய பிறகு மூன்று பேரும் அந் நகருக்குள் பிரவேசித்தார்கள். அன்று யாத்திரீகர்கள் யாரையுமே கோட்டை வாசலில் தடுத்து நிறுத்தவில்லை. எல் லாரையும் தங்குதடையின்றி விட்டுக் கொண்டிருந்தார்கள். காவலர்கள் சும்மா நின்று பார்த்துக் கொண்டிருந் தார்கள். கூட்டத்தோடு கூட்டமாக நம் கதா புருஷர்கள் மூவரும் நகருக் குள் பிரவேசித்துச் சென்றார்கள்.

அநுராதபுரத்தின் வீதிகளிலும் ஜனக் கூட்டம் அளவில்லாமலிருந்தது. "சாது! சாது!" என்ற கோஷம் வானை அளாவியது. ஆங்காங்கு பல மாட மாளிகைகளும் விஹாரங்களும் இடிந்து கிடப்பதை வந்தியத்தேவன் கண்டான். இடிந்து போன பல கட்டடங்கள் புதுப் பிக்கப்பட்டிருப்பதையும் பார்த்தான். புதுப்பிக்கும் திருப்பணி இளவரசர் கட் டளையின் பேரிலேதான் நடந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண் டான். இப்படியெல்லாம் இவர் செய்து வருவதின் நோக்கம்தான் என்ன? ஜயிக் கப்பட்ட நாட்டின் மக்களுக்கு இவர் ஏன் இவ்வளவு சலுகை காட்டுகிறார்? ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்துடன் அடிக்கடி சண்டை போட்டு வரு கிறார்கள் இந்தச் சிங்கள அரசர்கள். இத்தகைய நெடுங்காலப் பகைவர் களின் தலைநகரத்தை அழித்துக் கொளுத்தித் தரை மட்டமாக்குவ தற்கு மாறாக, இடிந்து போன கட்டடங்களைப் புதுப்பித்துத் திரு விழாக்கள் நடத்த இவர் அநுமதித்து வருகிறாரே? இது என்ன அதிசயம்! இதில் ஏதோ மர்மம் இருக்கத்தான் வேண்டும். அது என்னவாயிருக்கும்? வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் ஒரு விந்தையான எண்ணம் உதித்தது. ஆம், ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும்.

சோழ நாட்டில் இவருக்கு உரிமை எதுவும் இல்லை. பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலர் இருக்கிறார். அவருடன் போட்டியிட மதுராந்தகத்தேவர் இருக்கிறார். ஆகையால் இந்த மாஇலங்கைத் தீவில் இவர் ஒரு தனி ராஜ்யத்தை ஸ்தாபித்துச் சுதந்திர மன்னராக விரும்புகிறார் போலும்! — யார் கண்டது? இவருடைய விருப்பம் நிறைவேறினாலும் நிறைவேறலாம்! குடந்தை ஜோசியர் சொன்னார் அல்லவா? ''அருள்மொழிவர்மர் துருவ நட்சத்திரம் போன்றவர்! அவரை நம்பினவர்களுக்கு ஒரு குறைவும் இல்லை!'' என்று. அத்தகைய வீர புருஷரிடம் தான் வந்து சேர்ந்து விட்டதை நினைத்து அவனுடைய உள்ளம் மகிழ்ச்சியால் பூரித்தது.

வெளிப்புறங்கள் இடிந்து இருளடைந்திருந்த ஒரு பழைய மாளிகையின் வாசலில் அவர்கள் வந்து நின்றார்கள். குதிரைகளின் மீதிருந்து இறங்கினார்கள். அந்த இடம் முக்கியமான வீதிகளிலிருந்து சற்று ஒதுப்புறமாக இருந்தது. ஆகையால் அங்கே ஜனக் கூட்டம் இல்லை. இளவரசர் மூன்று தடவை கையைத் தட்டினார். உடனே இந்திர ஜாலத்தினால் நடந்தது போல் அந்த மாளிகையின் ஒரு பக்கத்தில் கதவு திறந்து வழி உண்டாயிற்று. ஆட்கள் யாருமே இருந்ததாகத் தெரியவில்லை. இளவரசர் இருட்டிலேயே நுழைந்து மேலே சென்றார். வந்தியத்தேவன் பின்னால் திரும்பிக் குதிரைகளின் கதி என்னவென்று ஆவலுடன் பார்த்தான். இளவரசர், ''குதிரைகளுக்கு வழி தெரியும்!'' என்று கூறி வந்தியத்தேவனைக் கையைப் பிடித்து இழுத்துச் சென்றார். சற்றுத் தூரம் இருளிலேயே நடந்தார்கள். பிறகு 'மினுக் மினுக்' என்று வெளிச்சம் தெரிந்தது. பின்னர், பிரகாசமான ஒளி தென்பட்டது. அது ஒரு பழைய காலத்து அரண்மனையின் உட்புறம் என்று வந்தியத்தேவன் கண்டான்.

''இங்கே கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும். மகாசேன சக்கரவர்த்தியின் அந்தப்புரம் இது. திடீரென்று சக்கரவர்த்தி விஜயம் செய்து நம்மைத் தூரத்தப் பார்த்தாலும் பார்ப்பார்'' என்றார் இளவரசர்.

''மகாசேனர் என்பவர் யார்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''மகாசேனர் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் இந்த இலங்கா ராஜ்யத்தை ஆண்ட சக்கரவர்த்தி. அவர் பொது மக்களுக்குப் பல நன்மைகளைச் செய்தார். ஆகையால் அவருடைய ஆவி இந்த நகரத்தில் இன்னமும் உலாவிக் கொண்டிருப்பதாக ஜனங்கள் நினைக்கிறார்கள். அவருடைய ஆவியானது துணியில்லாமல் குளிரில் கஷ்டப்படப் போகிறதே என்று மரக் கிளைகளில் துணிகளைக் கட்டித் தொங்க விடுகிறார்கள்! இந்த அரண்மனையிலும் அவருக்குப் பிறகு யாரும் வசிப்பதில்லை. வெறுமனே தான் விட்டு வைத்திருக்கிறார்கள்!'' என்றார் இளவரசர்.

இளவரசருக்கும் அவருடன் வந்தவர்களுக்கும் பணிவிடை செய்ய அங்கு ஏவலாளர் இருந்தார்கள். குளித்து உணவருந்திய பிறகு மூவரும் அந்த அரண்மனையின் உச்சி மாடத்துக்குச் சென்றார்கள். அவர்கள் இருந்த இடத்திலிருந்து சுற்றுப்புறமெங்கும் பார்க்கலாம். ஆனால் அவர்களைக் கீழே உள்ளவர்கள் பார்க்க முடியாது. அப்படிப்பட்ட இடத்தில் போய் அமர்ந்தார்கள்.

''ஐயா! பன்னிரண்டு நாழிகைக்கு எங்கேயோ வரும்படி புத்தர் சிலை செய்தி சொன்னதாகச் சொன்னீர்களே!'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''இன்னும் நேரம் இருக்கிறது. சந்திரன் இப்போதுதானே உதயமாகியிருக்கிறான்? அதோ அந்தத் '**தாகபா**'வின் உச்சிக்கு நேரே சந்திரன் வந்ததும் புறப்பட்டு விடுவோம்!'' என்றார் இளவரசர்.

அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் ஒரு பெரிய குன்று போன்ற தாகபா ஸ்தூபம் நின்றது. புத்தர் பெருமானுடைய திருமேனியின் துகளை அடியில் வைத்து எழுப்பிய ஸ்தூபங்களாதலால் அவை 'தாது கர்ப்பம்' என்று அழைக்கப்பட்டன. தாது கர்ப்பம் என்னும் பெயர்தான் பின்னர் 'தாகபா' ஆயிற்று.

''எதற்காக இவ்வளவு பெரிய கட்டடங்களைக் கட்டினார்கள்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''முதல் முதலில் புத்தர் எவ்வளவு பெரியவர் என்பதை ஜனங்களுக்கு உணர்த்துவதற்காக இவ்வளவு பெரிய சின்னங்களை நிர்மாணித்தார்கள். பின்னால் வந்த அரசர்களோ தாங்கள் எவ்வளவு பெரியவர்கள் என்பதைக் காட்டுவதற்காக, முன்னால் கட்டியிருந்த ஸ்தூபங்களைக் காட்டிலும் பெரிதாகக் கட்டினார்கள்!'' என்றார் இளவரசர்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சமுத்திரத்தின் கொந்தளிப்பைப் போன்ற பேரிரைச்சல் ஒன்று கேட்டது. வந்தியத்தேவன் இரைச்சல் வந்த திக்

கைத் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் ஒரு பெரிய சேனை சமுத்திரத்தைப் போன்ற பெருங் கூட்டம், — வீதிகளில் முடிவில்லாது நீண்டு போய்க் கொண்டிருந்த ஜனக் கூட்டம், — வருவது தெரிந்தது. அந்த ஜன சமுத்திரத்தின் நடுவே கரிய பெரிய திமிங்கிலங்கள் போல் நூற்றுக்கணக்கில் யானைகள் காணப்பட்டன. கடல் நீரில் பிரதிபலிக்கும் விண்மீன்களைப் போல் ஆயிரம் ஆயிரம் தீவர்த்திகள் ஒளி வீசின. ஜனங்களோ லட்சக் கணக்கில் இருந்தார்கள்.

வந்தியத்தேவன், "இது என்ன? பகைவர்களின் படை எடுப்பைப் போலஅல்லவா இருக்கிறது?" என்றான்.

"இல்லை, இல்லை! இதுதான் இந்த இலங்கை நாட்டிலேயே மிகப் பெரிய உற்சவமாகிய பெரஹராத் திருவிழா!" என்றார் இளவரசர்.

ஊர்வலம் நெருங்கி வரவர வந்தியத் தேவனுடைய வியப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. அந்த மா கிரி காட்சியை அவன் தன் வாழ்நாளில் பார்த்ததில்லை.

முதலில் சுமார் முப்பது யானைகள் அணிவகுத்து வந்தன. அவ்வளவும் தங்கமுக படாங்களினால் அலங்கரிக்கப் பட்ட யானைகள். அவற்றில் நடு நாயகமாக வந்த யானை எல்லாவற்றிலும் கம்பீரமாக இருந்ததுடன், அலங்காரத்திலும் சிறந்து விளங்கியது. அதன் முதுகில் நவரத்தினங்கள் இழைத்த தங்கப் பெட்டி ஒன்று இருந்தது. அதன் மேல் ஒரு தங்கக் குடை கவிந்திருந்தது. நடுநாயகமான இந்த யானையைச் சுற்றியிருந்த யானைகளின் மீது பிக்ஷுக்கள் பலர் அமர்ந்து வெள்ளிப் பிடி போட்ட வெண்சாமரங்களை வீசிக் கொண்டிருந்தார்கள். யானைகளுக்கு இடையிடையே குத்து விளக்குகளையும், தீவர்த்திகளையும் இன்னும் பலவித வேலைப்பாடமைந்த தீபங்களையும் ஏந்திக் கொண்டு பலர் வந்தார்கள். கரிய குன்றுகளை யொத்த யானைகளின் தங்க முக படாங்களும் மற்ற ஆபரணங்களும் பிக்ஷுக்களின் கைகளில் அசைந்த வெண்சாமரங்களும் பல தீபங்களின் ஒளியில் தகதக வென்று பிரகாசித்துக் கண்ணைப் பறித்தன.

யானைகளுக்குப் பின்னால் ஒரு பெரும் ஜனக் கூட்டம். அந்தக் கூட்டத்தின் மத்தியில் சுமார் நூறு பேர் விசித்திர மான உடைகளையும் ஆபரணங்களையும் தரித்து நடனமாடிக் கொண்டு வந்தார்கள். அவர்களில் பலர் உடுக்கை போன்ற வாத்தியங்களைக் கட்டிக் கொண்டு ஆடினார்கள். இன்னும் பல வகை வாத்தியங்களும் முழங்கின. அப்பப்பா! ஆட்டமாவது ஆட்டம்! கடம்பூர் அரண்மனையில் தேவராளனும் தேவராட்டியும் ஆடிய வெறியாட்டம் எல்லாம் இதற்கு முன்னால் எங்கே நிற்கும்! சிற்சில சமயம் அந்த ஆட்டக் காரர்கள் விர்ரென்று வானில் எழும்பிச் சக்கராகாரமாக இரண்டு மூன்று தடவை சுழன்றுவிட்டுத் தரையில் வந்தார்கள். அப்படி அவர்கள் சுழன்ற போது அவர்கள் இடையில் குஞ்சம் குஞ்சமாகத் தொங்கிக் கொண்டிருந்த துணி மடிப்புக்கள் பூச்சக்கரக் குடைகளைப் போலச் சுழன்றன. இவ்விதம் நூறுபேர் சேர்ந்தாற்போல் எழும்பிச் சுழன்று விட்டுக் கீழே குதித்த காட்சியைக் காண்பதற்கு இரண்டு கண்கள் போதவில்லைதான். இரண்டாயிரம் கண்களாவது குறைந்த பட்சம் வேண்டும். ஆனால் அத்தகைய சமயங்களில் எழுந்த வாத்திய முழக்கங்களைக் கேட்பதற்கோ இரண்டாயிரம் செவிகள் போதமாட்டா! நிச்சயமாக இரண்டு லட்சம் காதுகளேனும் வேண்டும். அப்படியாக உடுக்கைகள், துந்துபிகள், மத்தளங்கள், செப்புத் தாளங்கள், பறைகள் கொம்புகள் எல்லாம் சேர்ந்து முழங்கிக் கேட்போர் காதுகள் செவிடுபடச் செய்தன.

இந்த ஆட்டக்காரர்களும் அவர்களும் அவர்களைச் சுற்றி நின்ற கூட்டமும் நகர்ந்ததும் மற்றும் முப்பது யானைகள் முன்போலவே ஜாஜ்வல்ய மான ஆபரணங்களுடன் வந்தன. அவற்றில் நடுநாயகமான யானையின் மேலும் ஓர் அழகிய வேலைப்பாடு அமைந்த பெட்டி இருந்தது. அதன் மேல் தங்கக் குடை கவிந்திருந்தது. சுற்றி நின்ற யானை மீதிருந்தவர்கள் வெண்சாமரங்களை வீசினார்கள். இந்த யானைக் கூட்டத்துக்குப் பின்னாலும் ஆட்டக்காரர்கள் வந்தார்கள். இந்த ஆட்டக்காரர்களுக்கு நடுவில், ரதி, மன்மதன், முக்கண்ணையுடைய சிவபெருமான் வேடம் தரித்தவர்கள் நின்றார்கள். சுற்றி நின்றவர்கள் ஆடிக் குதித்தார்கள். "இது என்ன? சிவபெருமான் இங்கு எப்படி வந்தார்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"கஜபாகு என்ற இலங்கை அரசன் சிவபெருமானை அழைத்து வந்தான். அதற்குப் பிறகு இங்கேயே அவர் பிடிவாதமாக இருக்கிறார்!" என்றார் இளவரசர்.

"ஓ வீர வைஷ்ணவரே! பார்த்தீரா யார் பெரிய தெய்வம் என்று இப்

போது தெரிந்ததா?'' என்று வந்தியத்தேவன் கேட்டு வாய் மூடுவதற்குள் மற்றும் சில யானைகள் அதே மாதிரி அலங்காரங்களுடன் வந்து விட்டன. அந்த யானைகளுக்குப் பின்னால் வந்த ஆட்டக்காரர்களுக்கு மத்தியில் கருடாழ்வாரைப் போல் மூக்கும் இறக்கைகளும் வைத்துக் கட்டிக் கொண்டிருந்த ஆட்டக்காரர்கள் சுழன்றும் பறந்தும், குதித்தும், மூக்கை ஆட்டியும் ஆர்ப்பாட்டமாக ஆடினார்கள்.

''அப்பனே! பார்த்தாயா? இங்கே கருட வாகனத்தில் எங்கள் திருமாலும் எழுந்தருளியிருக்கிறார்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

மீண்டும் ஒரு யானைக்கூட்டம் வந்தது. அதற்குப் பின்னால் வந்த ஆட்டக்காரர்களோ கைகளில் வாள்களும் வேல்களும் ஏந்திப் பயங்கரமான யுத்த நடனம் செய்து கொண்டு வந்தார்கள்.

இந்தக் காட்சிகளையெல்லாம் கண்டும் பலவித சப்த விசித்திரங்களைக் கேட்டும் பிரமித்து நின்ற வந்தியத்தேவனுக்கு இளவரசர் இந்த ஊர்வலத் திருவிழாவின் வரலாற்றையும் கருத்தையும் கூறினார்.

தமிழக அரசர்களும் இலங்கை அரசர்களும் நட்புரிமை பாராட்டிய காலங்களும் உண்டு. கடல் சூழ் இலங்கைக் கஜபாகு மன்னனும் சேரன் செங்குட்டுவனும் அவ்விதம் சிநேகமாயிருந்தார்கள். சேரன் செங்குட்டுவன் கண்ணகி என்னும் பத்தினித் தெய்வத்துக்கு விழா நடத்தியபோது கஜபாகு அங்கே சென்றிருந்தான். அந்நாட்டில் நடந்த மற்ற திருவிழாக்களையும் கண்டு களித்தான். பின்னர் ஒரு சமயம் சேரன் செங்குட்டுவன் இலங்கைக்கு வந்திருந்தபோது கஜபாகு மன்னன் விழா நடத்தினான். தமிழகத்தின் தெய்வங்களாகிய சிவபெருமான், திருமால், கார்த்திகேயர், பத்தினித் தெய்வம் ஆகிய நான்கு தெய்வங்களுக்கும் ஒரே சமயத்தில் திருவிழா நடத்தினான். இந்த விழாக்களில் மக்கள் அடைந்த குதூகலத்தைக் கண்டு பின்னர் ஆண்டுதோறும் அந்த விழாக்களை நடத்தத் தீர்மானித்தான். புத்தர் பெருமானுக்கு அவ்விழாவில் முதல் இடம் கொடுத்து மற்ற நான்கு தெய்வங்களையும் பின்னால் வரச் செய்து விழா நடத்தினான். அன்று முதல் அந்த விழா இலங்கையில் நிலைத்து நின்று மிகப் பெரிய திருவிழாவாக ஆண்டு தோறும் விடாமல் நடந்து வருகிறது.

''ஆனால் தெய்வங்களை எங்கும் காணவில்லையே?'' என்றான் வல்லவரையன்.

''ஒவ்வொரு யானைக் கூட்டத்திலும் நடுநாயகமாக வந்த யானை மீது வைத்திருந்த பெட்டியைப் பார்த்தீரா?''

''பார்த்தேன்! அந்தப் பெட்டிக்குள் தெய்வங்களைப் பூட்டி வைத்திருக்கிறார்களா? தப்பித்துக் கொண்டு தமிழகத்துக்குப் போய்விடக் கூடாது என்று?''

இதைக் கேட்ட பொன்னியின் செல்வர் நகைத்துவிட்டு, ''அப்படியில்லை. முதலில் வந்த யானை மீதிருந்த பெட்டிக்குள்ளே புத்த பெருமானுடைய பல் ஒன்றைப் பத்திரமாகப் பூட்டி வைத்திருக்கிறார்கள். புத்த சமயத்தார் இந்நாட்டில் போற்றிக் காத்து வரும் தெய்வங்களுக்குள்ளே விலை மதிப்பற்ற செல்வம் அது. ஆகையால் அந்த அப்புனிதப் பொருளை அழகிய பெட்டியில் வைத்து யானை மீது ஏற்றி ஊர்வலமாக எடுத்துச் சென்றார்கள்!'' என்றார்.

''பின்னால் வரும் பெட்டிக்குள்ளே என்ன இருக்கிறது?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''சிவன், விஷ்ணு, முருகன், கண்ணகி ஆகியவர்களின் பற்கள் கிடைக்கவில்லை. ஆகையால் அவற்றுக்குப் பதிலாக அந்தத் தேவாலயத்தின் தெய்வங்களுக்கு அணியும் திரு ஆபரணங்களை அந்தப் பெட்டியில் பத்திரமாய் வைத்துக் கொண்டு போகிறார்கள்'' என்று இளவரசர் கூறினார்.

வந்தியத்தேவன் சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, ''ஆகா! தங்களுக்குப் பதிலாகப் பெரிய பழுவேட்டரையர் மட்டும் இங்கே படையெடுத்து வந்திருந்தால்...'' என்றான்.

அச்சமயத்தில் திருவிழா ஊர்வலத்தின் கடைசிப் பகுதி அந்த வீதி முடுக்கில் திரும்பிச் சென்றது. வாத்திய முழக்கம், ஜனங்களின் ஆரவாரம்—இவற்றின் ஓசை குறையத் தொடங்கியது.

''குறிப்பிட்ட நேரத்துக்கு இன்னும் ஒரு நாழிகைதான் மிச்சமிருக்கிறது.. வாருங்கள், போகலாம்!'' என்று இளவரசர் மேடையிலிருந்து இறங்கினார். மூவரும் கீழே வீதிக்கு வந்தார்கள். ஊர்வலம் சென்றதற்கு நேர் எதிர்ப்பக்கம் நோக்கி நடந்தார்கள். நகர மக்கள் அனைவரும் பெரஹராத் திருவிழாவில் ஈடுபட்டிருந்த படியால் இவர்கள் போன வீதிகளில் ஜன நடமாட்டமே இல்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு விஸ்தாரமான ஏரியின் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். அந்த ஏரியில் தண்ணீர் ததும்பிக் கரையில் அலைமோதிக் கொண்டிருந்தது. சந்திர கிரணங்கள் அந்த அலைகளில் தவழ்ந்து விளையாடி வெள்ளி அலைகளாகச் செய்து கொண்டிருந்தன.

ஏரிக் கரையிலிருந்து கீழே இறங்கிச் சென்றார்கள். அவ்விடத்தில் செண்பக மலர்களின் நறுமணம் பரவி யிருந்தது. இன்னும் பலவகைப் புஷ்பச் செடிகளில் வெள்ளை மலர்கள் கொத்துக் கொத் தாகப் பூத்துத் திகழ்ந்தன. ஆங்காங்கே சிறிய சிறிய செய்குன்றுகளும் படித் துறைத் தடாகங்களும் காணப்பட்டன. தடாகம் ஒன்றின் மேலே அமைந்திருந்த ஒரு சிங்க முகத்துவாரத்திலிருந்து நீர் அருவி பொழிந்து கொண்டிருந்தது. அந்தத் தடாகக் கரை அருகில் நெருங்கிச் சென்று மூவரும் நின்றார்கள்.

அநுராதபுரத்துக்கு வெளியே சாலை ஓரத்தில் நின்ற புத்தர் சிலையின் தோற் றம் வந்தியத் தேவனுடைய மனக்கண் முன்னால் வந்தது. சிலையின் அடிப் பீடத் தில் வரிசையாக வைத்திருந்த தாமரை மொட்டுக்களை இளவரசர் எண்ணிப் பார்த்துப் பன்னிரண்டு என்று சொன் னார். அவை பன்னிரண்டு நாழிகையைக் குறித்தனபோலும். தாமரை மலர்களா யிராமல் மொட்டுக்களா யிருந்தபடி யால் இரவைக் குறித்தன போலும். அந்த மொட்டுக்களுக்கு அருகிலிருந்த சிங்க முகத்துக் கிண்டியும் வந்தியத் தேவனுடைய நினைவில் இருந்தது. அந் தப் பாத்திரம் இந்தச் சிங்கமுக அருவி விழும் தடாகத்தைக் குறிப்பிட்டது போலும்!

இதெல்லாம் சரிதான். ஆனால் இங்கு எதற்காக யார் இளவரசரை வரச் செய்திருக்கிறார்கள்? இதில் என்னென்ன அபாயங்கள் நேரிடுமோ என்னமோ தெரியவில்லையே? ஆயுதம் ஒன்றும் கொண்டுவரக் கூடாது என்று இளவர சர் தடுத்ததின் கருத்து என்ன? ஒரு வேளை இங்கு ஏதேனும் காதல் நிகழ்ச்சி நடைபெறப் போகிறதோ?

இந்த நினைவு வந்ததும் வந்தியத்தேவ னுடைய உள்ளம் கொந்தளித்தது. அவ னுடைய மனம் கடல் கடந்து பழையா றைக்குப் பாய்ந்து சென்றது. இளைய பிராட்டியும் வானதி தேவியும் அவன் மனக் கண்முன் வந்தார்கள்.

இளவரசரின் வாயைப் பிடுங்கிப் பார்க்கலாம் என்று வந்தியத்தேவன் எண்ணினான். "ஐயா! இந்த இடத் தைப் பார்த்தால் பழைய காலத்து அரண்மனை நந்தவனம் மாதிரி அல்லவா தோன்றுகிறது?" என்றான்.

"ஆம்; இது அரண்மனை நந்தவனம் இருந்த இடம்தான். ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னால் இந்த நந்தவனத்தை யொட்டி துஷ்டகமனுவின் அரண்மனை இருந்தது. அதோ பார்! இன்னமு அந்த அரண்மனையின் சில பகுதிக அழியாமல் இருக்கின்றன!" என்று

வந்தியத்தேவன் அங்கே சற்றுத் தூரத்தில் தெரிந்த பழைய அரண்மனை மாடங்களைப் பார்த்துவிட்டு, "அந்தக் கட்டிடங்கள் அரண்மனை அந்தப்புரமாக இருந்திருக்கலாம். இந்தத் தடாகத்தில் அரசிளங்குமரிகள் இறங்கி ஜலக்ரீடை செய்து மகிழ்ந்திருப்பார்கள்!" என்றான்.

"இந்த நந்தவனத்தில் நடந்த அதிசயமான சம்பவம் வேறு ஒன்று உண்டு. ஆயிரம் வருஷத்துக்கு முன் னால் நடந்தது. துஷ்டகமனு மன்னனின் புதல்வன் ஸாலி என்பவன் இங்கே ஒரு நாள் உலாவிக் கொண்டிருந்தான். ஒரு பெண் இந்தத் தடாகத்தில் தண் ணீர் மொண்டு புஷ்பச் செடிகளுக்கு ஊற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான். அந்தப் பெண்ணிடம் காதல் கொண் டான். அவள் ஒரு சண்டாளப் பெண் என்றும், அவள் பெயர் அசோகமாலா என்றும் அறிந்தான். சண்டாளப் பெண்ணா யிருந்தாலும் அவளையே மணந்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடித்தான். 'அப்படியானால் நீ சிம்மா சனம் ஏறமுடியாது' என்று தந்தை கூறி னார். 'சிம்மாசனம் வேண்டாம்; எனக்கு அசோகமாலாதான் வேண்டும்' என்று ஸாலிவாஹனன் பிடிவாதமாகக் கூறி விட்டான். இந்த உலகத்தில் இன்னொரு ராஜ குமாரனால் இப்படிக் கூற முடியும் என்று தோன்றுகிறதா?"

இவ்வாறு பொன்னியின் செல்வர் கூறியபோது, கோடிக் கரைக் கடலில் படகு செலுத்திய 'சமுத்திர குமாரி' யின் நினைவு வந்தியத்தேவனுக்கு வந் தது. ஆகா! ஒருவேளை இவரும் அந்தப் பெண்ணை நினைத்துக் கொண்டுதான் இந்தக் கதையைச் சொல்லுகிறாரா, என்ன?

பூங்குழலியின் பேச்சை எப்படி எடுக் கலாம் என்று அவன் எண்ணிக்கொண் டிருந்தபோது, அங்கே ஓர் அதிசயம் நிகழ்ந்தது. சிங்கதாரைத் தடாகத்தின் பின்புறச் சுவரில் உட்பக்கம் குழிவாக அமைந்து, அதற்குள்ளே இருவர் அம ரும்படியான ஒரு கல் ஆசனம் இருந்தது. அப்படி அமைந்திருந்த இடத்தின் ஓர் ஓரத்தில் திடீரென்று விளக்கு வெளிச் சம் காணப்பட்டது. விளக்கைப் பிடித் துக்கொண்டிருந்தவரின் கரம் முதலில் வெளிவந்தது. பிறகு புத்த பிக்ஷு ஒரு வரின் திருமுகமும் காணப்பட்டது.

வந்தியத்தேவன் அந்த இந்திரஜாலக் காட்சியை அடங்கா வியப்புடன் பார்த் துக்கொண்டு நின்றான். மேலே என்ன நடக்கப் போகிறது என்று தெரிந்து கொள்ளும் ஆர்வத்தினால் அவன் மூச்சும் சிறிது நேரம் நின்றிருந்தது! (தொடரும்)



## நெருங்கி உறவாடும்,

## நெஞ்சைக் கவரும் நறுமணமுள்ள

# லக்மே டால்கம்

உங்கள் இதயம் கவரும் நறுமணத்தை மணிக் கணக்கில் வீசிக்கொண்டிருக்கும் டால்கம்—நெஞ்சை விட்டகலாத லக்மே! அந்த இணையற்ற இன்பத்தை அனுபவிக்கத் தாமதமேன்? இன்றே உங்கள் மேனியின் மீது இம்மணம் கமழும் லக்மே டால்கம் தூவுங்கள். அது பட்டுப் போன்ற மென்மையானது; நேர்த்தியானது; இணைபிரியாதது. ஒரு நாளை 'லக்மே' சுகமாகத் துவக்க, இதை விட இன்பம் தருவது வேறென்ன இருக்கப் போகிறது?

இது ஐவகை மணம் வீசி, உங்களை அன்புடன் அணைய வருகிறது. லேவெண்டர், வெட்டிவேர், நிர்வாண், சந்தனம் ஆகிய நான்கும், மீடியம் மற்றும் எகானமி சைஸ்களிலே வருகின்றன. ஐந்தாவதான ஃப்ளோரல் மிஸ்ட் பெரிய ஃபேமிலி சைஸில் வருகிறது. எல்லாமே நீங்கள் எளிதில் வாங்கக்கூடிய விலையில்; எல்லாமே இன்ப மணம்; எல்லாமே இன்ப மயம்!





# ராமாயணம்

## -ராஜாஜி-

### 16 சுகவாழ்வு

சக்கரவர்த்தியும் ராஜ குமாரர்களும் திரும்பி வருவதை அறிந்து அயோத்தி நகரத்தினரின் மகிழ்ச்சி கரை புரண்டு ஓடிற்று. தசரதனையும் பரிவாரத்தையும் ராஜ குமாரர்களையும் வரவேற்பதற்காக அலங்கரிக்கப்பட்ட அயோத்தி நகரம் தேவலோகத்தைப் போல் ஜொலித்தது.

ராமனும் சீதையும் மிகவும் சந்தோஷமாக அயோத்தியில் ஒரு குறைவுமின்றிப் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்தார்கள். ராமன் தன் இதயத்தை அப்படியே சீதைக்கு அர்ப்பணம் செய்து விட்டான். இருவர்களுக்குமிடையே வளர்ந்த பிரியமானது இருவருடைய குணங்களைப் பற்றியதா? அல்லது இருவர்களுடைய சம அழகைப் பற்றியதா என்பதைச் சொல்ல முடியாமல் இருந்தது. இரண்டும் சேர்ந்தே அவர்களுடைய பரஸ்பர அன்பு இரு மடங்காக வளர்ந்து கொண்டு போயிற்று. ராமனுடைய உள்ளமும் சீதையினுடைய உள்ளமும் சம்பாஷணை இன்றியே ஒன்றோடொன்று பேசும் என்கிறார் கவி. இவ்வாறு ராமனுடைய பிரியத்தை அனுபவித்த சீதையின் காந்தியானது தேவலோகத்தில் சாட்சாத் ஸ்ரீதேவியின் காந்தியைப் போல் பிரகாசித்தது.

வெகு நாட்களுக்குப் பிறகு வனவாசம் ஆரம்பித்த சமயம், மகா தபஸ்வி அனசூயை ராமன் மேல் சீதை வைத்து வந்த அன்பைப் பற்றிப் பாராட்டிப் பேசியபோது சீதை சொன்னாள்: ''ராமர் எல்லா நற் குணங்களையும் அடைந்தவர். அவருடைய அன்பு என் அன்புக்குச் சமமான அன்பு. எந்த நிலையிலும் மாறாத அன்பு. மாசற்ற சிந்தனையும் புலன்களை அடக்கி



பாளும் சக்தியும் பெற்றவர் அவர். தாயைப் போலும் தகப்பனைப் போலும் என்னைக் காத்து வருகிற இவரை நான் எப்படிக் காதலிக்காமல் இருக்க முடியும்?'' என்றாள்.

காதலைப் பற்றி ஆராய்ச்சி செய்கிறவர்களும், விவாகம் செய்து கொண்டு நன்றாக வாழ வேண்டும் என்று ஆசைப்படும் யுவர்களும் யுவதிகளும், சீதை அனசூயைக்குச் சொன்ன இந்த வார்த்தைகளைக் கவனிக்க வேண்டும். அவற்றில் பொருள் நிறைந்து கிடக்கிறது. இருவர்களுடைய அன்பும் சமமாக இருக்க வேண்டும். ஒன்று அதிகமாகவும் ஒன்று குறைவாகக் கடன்பட்டதாகவும் இருக்கலாகாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் அன்பு மாறலாகாது. வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகள் நிகழும். அன்பு ஒன்று போலவே யிருக்க வேண்டும். என்ன நேர்ந்தாலும் அதனால் அன்பானது ஏற்றத் தாழ்வு அடையக் கூடாது. கொண்ட மனைவிக்குப் புருஷன் தாயைப் [போலும், தந்தையைப் போலும் இருக்க வேண்டும். இப்படியெல்லாம் இருந்தால் 'வாழ்க்கையில் மகிழ்ச்சி நிறைந்து தேவியின் அருளைப் பெறுவோம்.

# 17. யுவ ராஜ்யம்

**ப**ன்னிரண்டு ஆண்டுகள் ஆனந்தமாக ராமனும் சீதையும் அயோத்தியில் சுகம் அனுபவித்தார்கள். இனி உலகில் மக்கள் படும் இடையூறுகள், துயரங்கள், கோப தாபங்கள் எல்லாவற்றையுமே பகவானும் ஈசுவரியும், நேராக ஊனுடலில் அனுபவிக்கப் போகிறார்கள். 'எந்த அவதாரம் எடுக்கிறேனோ அந்த அவதாரத்துக்குரிய தேகமும் உணர்வுமாகத்தான் என் திருவிளையாடல் நடைபெற்று வரும்' என்பது பகவானே சொல்லிய விளக்கம்.

தன்னுடைய ஊன் உயிர் உணர்வில் மற்ற மக்களைப் போல் துன்பப்பட்டு இமையோர் இடுக்கண் காத்த சக்கரவர்த்தித் திருமகன் யார்? எங்கும், எதிலும் உள்ளும் புறமும் உள்ள லோக நாதனே! இதைப் பெரியோர் அறிவார்கள் என்று விளக்கிச் சொல்லிக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் அயோத்தியா காண்டம் ஆரம்பிக்கிறார்.

**வானின்(று) இழிந்து வரம்பிகந்த**
**மாபூ தத்தின் வைப்பெங்கும்**
**ஊனும் உயிரும் உணர்வும் போல்**
**உள்ளும் புறத்தும் உளனென்ப**
**கூனும் சிறியகோத் தாயும்**
**கொடுமை இழைப்பக் கோல்துறந்து**
**கானும் கடலும் கடந்திமையோர்**
**இடுக்கண் காத்த கழல்வேந்தை**

**நா**ன்கு புத்திரர்களிடமும் தசரதனுக்கு மிக மிகப் பிரியம். ஆயினும் ராமனிடத்தில் அதிகப் பிரியம் என்றே சொல்லலாம். அந்தப் பிரியத்துக்குத் தகுந்த ராஜ லக்ஷணங்களும் சீலமும் ராமனிடம் இருந்தன. கௌசல்யா தேவியோ இந்திரனைப் பெற்ற அதிதியைப் போல் ராமனை மகனாக அடைந்து சொல்லுக் கடங்காத பெருமிதத்தை அனுபவித்து வந்தாள்.

சக்கரவர்த்தித் திருமகனுடைய குணங்களை எடுத்துக் காட்டி வால்மீகி பக்கம் பக்கமாக அடுக்கி யிருக்கிறார். ராம குணங்களாகிய சமுத்திரத்திலிருந்து எவ்வளவு எடுத்துக் குடித்தாலும் முனிவருக்குத் திருப்தி யில்லை. தாமே சொல்லுவதாகவும், தசரதன் கண்டு அனுபவிப்பதாகவும், ஜனங்கள் அவனைப் பற்றிப் புகழ்வதாகவும் இன்னும் இவ்வாறு பல துறைகளிலும் பல இடங்களில் ராமனுடைய குணநிசயங்களை எடுத்துக் காட்டி யிருக்கிறார். எழுத்துச் சிக்கனம் அதிகம். அப்படியாயினும் பக்கம் பக்கமாக நிறைந்து கிடக்கிறது. மக்களுக்கு இருக்க வேண்டிய நற்குணங்கள், லக்ஷணங்கள் இவையனைத்தும் ராமனிடம் இருந்தன என்பது முனிவருடைய கருத்து. இந்தக் குணங்களைப் பற்றிப் படித்தும் கேட்டும் மக்கள் மேன்மையடைவார்கள் என்று கருதி வால்மீகி ரிஷி ராமனுடைய குணநிசயங்களை அடிக்கடி மிக விரிவாகப் பாடியிருக்கிறார்.

ராமனுடைய திருமேனி யழகு, பராக்கிரமம், உள்ளத்தின் தூய்மை, வாழ்க்கையில் சீலம், இரக்கம், பேச்சினிமை, சாந்தம், நிறைந்த அறிவு, இவற்றுடன் அபூர்வ தேக பலம், வியாதியற்ற சரீரம், ராஜ்ய பரிபாலனத்துக்கு உரிய நீதி சாஸ்திரங்களில் பயிற்சி இவைகளை யெல்லாம் கண்டு ஜனங்கள் ராமன் எப்போது அரசனாவான் என்று விரும்பி எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். தசரதன் இதை நன்றாய் அறிவான். ஆனபடியால் தன் முதிய வயதைக் கருத்தில் கொண்டு ராமனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவிட்டு அவனிடம் ராஜ்ய பரிபாலனத்தை ஒப்புவித்துவிட விரும்பினான். இதை ஒரு நாள் மந்திரிகளிடத்தில் சொல்லி ராஜ சபையைக் கூட்டினான்.

ரிஷிகளும் அறிஞர்களும் அயோத்தி நகரத்துச் சிரேணித் தலைவர்களும் பல தேசங்களின் அரசர்களும் தசரதன் கூட்டிய ராஜ சபைக்கு வந்து அவரவர்களுக்குரிய ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். கிரமப்படி எல்லாரும் அமர்ந்த பின் தசரதன் எழுந்து பேசினான். துந்துபி நாதம் கொண்ட அவனுடைய குரல், மேக கர்ஜனைபோல் கம்பீர பிரதித்வனியோடு சபா மண்டபத்தில் விம்மியது. தசரதன் முகத்தில் ராஜ லக்ஷண காந்தி ஜொலித்தது. அவன் பேச்சு, பொருள் செறிந்து கேட்போர் மனத்தைக் கவர்ந்தது.

''என் முன்னோர்களைப் போலவே, நானும் பெற்ற குழந்தையைப் போல் இந்த ராஜ்யத்தைப் போற்றி வந்தேன். சோம்பலின்றி மக்களுக்காக உழைத்து வந்தேன். இப்போது என் உடல் மூப்பினால் தளர்ந்து போயிருக்கிறது. என் மூத்த மகனை யுவராஜனாக நியமித்து ராஜ்ய பாரத்தை அவனிடம் ஒப்படைத்து விட்டு நான் ஓய்வுபெற விரும்புகிறேன். என் முன்

ஞேர்களின் வழியைப் பின்பற்றி நானும் மிகுதியுள்ள என் வாழ்நாளை வனத்தில்கழிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

''என் மூத்த மகன் ராமன் ராஜ்ய பாரத்தை என்னைப் போலவே நன்ருகத் தாங்குவான். அதற்கு வேண்டிய எல்லாக் குணங்களும் அவன் பெற்றிருக்கிருன். ராஜ சாஸ்திர நிபுணன், நீதி சாஸ்திரமும் நன்ருக அறிந்தவன். சத்துருக்களின் பலத்தை அடக்கும் வீரமும் சக்தியும் உடையவன். என் பாரத்தை அவன் தோளின் மேல் வைத்துவிட்டு ராஜ்யத்தின் க்ஷேமத்தைப் பற்றி நான் கவலையற்றிருக்க விரும்புகிறேன். சபையில் உள்ள பெரியோர்களும் அரசர்களும் மகாஜனங்களும் அனுமதிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன். என் யோசனை தவருக இருந்தால் சொல்வீர்களாக'' என்ருன்.

அரசனுடைய பேச்சைக் கேட்டதும் சபையில் மகிழ்ச்சியைக் குறிக்கும் சப்தம் அலையலையாகக் கிளம்பிற்று. ராமனை யுவராஜாவாக்குகிறேன் என்ற பேச்சைக் கேட்டதும் கரு மேகத்தைக் கண்ட மயில்கள் நர்த்தனம் செய்து மகிழ்வது போல, ''அப்படியே செய்வீர்! அப்படியே செய்வீர்!'' என்று சபையில் நான்கு பக்கத்திலிருந்தும் கூக்குரல் எழுந்தது. அந்தணர்களும், சேனைத்தலைவர்களும், நகரத்துச் சிரேஷ்டர்களும், கிராமங்களிலிருந்து வந்திருந்த ஜனபதத் தலைவர்களும் எல்லாரும் ''ராமனுக்கு யுவராஜ அபிஷேகம் செய்து ராஜ காரியங்களை அவனிடம் ஒப்புவிப்பதை நாங்கள் அனைவரும் விரும்புகிறேம்'' என்று ஏகோபித்து ஆமோதித்தார்கள்.

இதைக் கேட்டு அரசன் மறுபடியும் பேசலானுன்: ''நீங்கள் கொடுத்த அபிப்பிராயத்துக்குக் காரணங்கள் காட்டாமல், நான் சொன்னதை அப்படியே ஒப்புக் கொண்டு விட்டதில் எனக்குத் திருப்தியில்லை. பெரியோர்கள் விஷயங்களை விளக்கிப் பேச வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்று சொன்னுன்.

அப்போது சபையில் பலர் எழுந்து இராமனுடைய குணாதிசயங்களையும், ராஜ்ய பாரம் தாங்கும் தகுதியையும் விஸ்தாரமாக எடுத்துக் காட்டினுர்கள். அதைக் கேட்கக் கேட்க அரசனுடைய உள்ளம் ஆனந்தத்தில் மூழ்கிற்று. முடிவில் 'தாமதம் செய்ய வேண்டாம். உடனே ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வீர்' என்று ஜனங்கள் யாவரும் ஒருமிக்க நின்று கைகூப்பிக் கேட்டுக் கொண்டார்கள்.

''என் அன்பார்ந்த பிரஜைகளே! நீங்கள் சொல்வதைக் கேட்டு நான் எல்லை கடந்த மகிழ்ச்சி அடைந்தேன். அப்படியே செய்வேன். யுவராஜ்ய பட்டாபிஷேக மங்கள காரியம் கிரமப்படி நடைபெறும்'' என்ருன் அரசன்.

வசிஷ்டர், வாமதேவர் முதலிய பெரியோர்களைப் பார்த்து தசரதன், ''இது சித்திரை மாதம். மங்களமான காலம். வனங்களெல்லாம் பூத்து அழகாக விளங்கும் பருவம். அபிஷேகத்துக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யுங்கள்'' என்று சொன்னுன்.

இவ்வாறு உத்தரவிட்டதும் ஜனக் கூட்டத்திடையே பெரிய சந்தோஷ ஆரவாரம் பொங்கிற்று. **(தொடரும்)**

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி.

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ ஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட்**
**'ஆஸ்ப்ரோ'** அதிவேகமாக
**வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் (N) தயாரிப்பு

AG.37.TAM

"விஜயவாடாவில் புயல் வீசிப் பலத்த மழையில் தந்திக் கம்பங்கள் சாய்ந்தன. எங்கும் செய்தித் தொடர்பு கத்திரிக்கப்பட்டு விட்டது. எனினும் மக்கள் படும் துயரங்கள் அனைத்தும் தலைமை ரயில்வே காரியாலயங்களுக்குத் துரிதமாகத் தெரிய வந்து உதவி செய்ய வேண்டிய முயற்சிகள் எடுக்கப்பட்டன. இது எப்படிச் சாத்தியமாயிற்று? "ரேடியோத் தொடர்பு வசதி (Microwave Radio)யினால் விவரங்கள் அறியப் பட்டன. விமானம் மூலம், பாதிக்கப்பட்டவர்களுக்கு வேண்டிய





# பழைய 'ரயில்வே'க்குப் புதிய வசதி!

உணவு வசதிகள் அளிக்கப் பட்டன!" என்று விவரித்தார் தென்னிந்திய ரயில்வே பிரதம தகவல் அதிகாரி திரு பி. நடராஜன்.

"இயற்கையின் சோதனைகளாலோ, அல்லது திருடர்கள் கம்பிகளைக் களவாடிச் சென்றதாலோ செய்தித் தொடர்பு கத்திரிக்கப்பட்டு ரயிலோட்டம் பாதிக்கப்பட்டு வந்தது. இனி இந்த மாதிரி தொல்லையில்லை. மைக்ரோ வேவ் ரேடியோத் தொடர்பு ஒலி அலைகளை அனுப்பிப் பதிலையும் வாங்கிக் கொடுத்துத் துரிதத் தொடர்புக்கு வசதி செய்து தருகிறது. மைக்ரோவேவ் தொடர்பினால் சென்னை, குண்டக்கல், ஒலவக்கோடு, பெங்களூர், திருச்சி, மதுரை ஆகிய முக்கிய ரயில் நிலையங்கள் இணைக்கப்பட்டு விட்டன!" என்று தொடர்ந்து தகவல்களை ஒலிபரப்பினார் பிரதம தகவல் அதிகாரி.

தென்னிந்திய ரயில்வேயில் இருபத்தாறு ரயில்வே நிலையங்களுக்கிடையில் இந்த மைக்ரோ வேவ் ரேடியோ மூலம் செய்தித் தொடர்பும், டெலிபிரின்டர் வசதியும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒன்றரைக் கோடி செலவில் இந்த நவீன வசதியைத் தென்னிந்திய ரயில்வே பெற்றிருக்கிறது. அந்நியச் செலாவணி நாற்பத்தைந்து லட்சம்.

மைக்ரோ அலை, அலைஅலையாகப் பரவாமல் ஒளிக் கதிர் போன்று நேர்க் கோட்டில் செல்லும். ஆகவே, தடங்கல் ஏற்படாதிருக்க மலைப் பிரதேசங்களில் ஒலிப் பிரதிபலிப்பு நிலையங்களை நிறுவியுள்ளனர். இந்த நிலையங்களை நிறுவப் பல்வேறு கடுமையான சோதனைகளை மேற்கொண்டிருக்கிறார்கள் ரயில்வே நிர்வாகத்தினர். நூற்றுக்



- ☐ நான்கு ராஜ்ய மந்திரிகளோடு மைக்ரோவேவ் ரேடியோ டெலிபோன் தொடர்பு கொள்கிறார் ரயில்வே மந்திரி ராம்சுபாக் சிங்.
- ☐ 'மைக்ரோவேவ்' நிலையத்தின் அருகே வானளாவும் 'டவர்'.
- ☐ மைக்ரோவேவ் நிலைய அமைப்புக்கான ஆராய்ச்சியில் மூழ்கியிருக்கிறார்கள்.

கணக்கான இடங்களைப் பார்வையிட்டு அவற்றின் தகுதிகளை ஆராய்ந்திருக்கிறார்கள். ஹைட்ரஜன் பலூனில் சுழலும் கண்ணாடிகளை வைத்து அனுப்பிப் பகலில் சூரியக் கதிர்களைப் பிரதிபலிக்கச் செய்தும், இரவில் பிரகாசமான விளக்குகளை (Search lights) பிரதிபலிக்கப் பண்ணியும் ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள்.

இந்த ஆராய்ச்சியினால் மைக்ரோ அலை பிரதிபலிப்பு நிலையங்களை எந்த இடங்களில் அமைக்கலாம் என்று நிர்ணயிக்க முடிந்தது. ஏலகிரி, திருப்பதி, கொடைக்கானல், ஏர்க்காடு, ஹார்ஸ்லி, நந்தி மலை உச்சிகளில் இந்த மைக்ரோ அலை பிரதிபலிப்பு நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன.



ஹைட்ரஜன் பலூன் ஆராய்ச்சி நடக்கிறது.

எண்பது மைக்ரோ அலை டிரான்ஸ் ரிஸீவர்கள், நூற்றிருபது டெலிபோன் இணைப்புக்கள், இருபத்து நான்கு டெலிபிரிண்டர்கள், கணக்கு விவரங்கள் அளிக்கும் வசதிகள் அனைத்தும் கொண்டது இந்தத் திட்டம். மின் வசதி போய் விட்டால்கூட பாட்டரி வசதியினால் மைக்ரோ அலை ஒலிபரப்புக் கருவிகள் இயங்கக் கூடியவை.

மிக உயரமான மைக்ரோ அலை டவர்கள் உருவாக 700 மெட்ரிக் டன் எஃகும், இந்த டவர்களின் அஸ்திவாரத்துக்கு 1,00,000 சதுர அடி கான்கிரீட்டும் தேவைப்பட்டன என்றால் இந்தப் பிரும்மாண்டமான திட்டத்தின் அளவைத் தெரிந்து கொள்ளலாம்.

★

தென்னிந்திய ரயில்வே தலைமைக் காரியாலயத்தில் இந்த மைக்ரோ அலை ரேடியோ, டெலிபிரிண்டர் வசதித் தொடர்பின் தொடக்க விழா, திருப்பதியிலிருந்து சுப்ரபாதமும், பாசுரமும் ஒலிபரப்பாக ஆரம்பமாயிற்று. ரயில்வே மந்திரி நான்கு ராஜ்ய மந்திரிகளோடு இந்த மைக்ரோ அலை ரேடியோ டெலிபோன் வாயிலாக உரையாடினார். உடனே இந்த ரேடியோத் தொடர்பு சரியாக இயங்குகிறதென்று உறுதியாயிற்று!

முதலில் ஆந்திரப் பிரதேச தகவல் மந்திரி நரசிங்கராவிடம், ''என்ன சௌக்கியமா ?'' என்று கேட்டார் ரயில்வே மந்திரி ஆங்கிலத்தில்.

''இந்தத் துரிதத் தொடர்பு வசதியினால் நான்கு ராஜ்யங்களில் ஒருமைப்பாடு காண வழி வகுத்து விட்டீர்கள் !'' என்று ஆந்திர மந்திரியும் ஆங்கிலத்திலேயே பகர்ந்தார்.

அடுத்து மலையாள ராஜ்ய மின்சார மந்திரி கோவிந்தன்நாயருடன் ரயில்வே மந்திரி யோக க்ஷேமம் விசாரித்த போது, ''இனி ரயில்வேக்கள் குறித்த காலத்தில் இயங்குவதற்கு ஏற்பாடுசெய்யுங்கள்!'' என்று அவர் தமது குறையைப் பறைந்தார்!

மைசூர் கல்வி உதவி மந்திரி ஸோஹி, ''இந்தியாவிலே அழகிய நகரமான பெங்களூரிலிருந்து பேசறேன் !'' என்று பெருமைப்பட்டுக் கொண்டார்.

திருச்சியிலிருந்து பேச வேண்டிய தமிழகத் தொழில் மந்திரி திரு மாதவன் வழியில் விழா ஒன்றில் மாட்டிக் கொண்டதால் அவரோடு தொடர்பு கொள்ள முடியவில்லை!

மதுரையிலுள்ள பொதுப் பணித்துறை அமைச்சர் ஜனப் சாதிக் பாஷாவோடு, ''நமஸ்கார்!''என்று ரயில்வே மந்திரி பேச்சைத் தொடங்கியதும், ''வணக்கம்!'' என்று மறுமொழி கூறியதோடு நிறுத்திக் கொண்டார் தமிழகப் பொதுப் பணித் துறை மந்திரி, வார்த்தை சிக்கனம் பண்ணி.

ஆனால், ''மைக்ரோ அலை டெலிபோன் மூலமாக என்னைப் பேசச் சொல்லியிருந்தால் தமிழ் நாட்டுக்குத் தேவையான மின்சார ரயில் பாதை, தேவையான இதர வசதிகள் குறித்து ஒரு நீண்ட பட்டியலைப் பொழிந்து தள்ளியிருப்பேன் !'' என்றார் தமிழக முதன் மந்திரி திரு கருணாநிதி.

மைக்ரோ அலை ரேடியோ டெலிபோனில் அவரைப் பேசச் சொல்லாததால் ஒன்றும் குறைந்து போய்விடவில்லை; அவர் சொல்ல நினைத்ததையெல்லாம் மைக்கிலேயே சொல்லி விட்டார். ''ரயில்வே இலாகா இப்படித் துரித செய்தித் தொடர்பு ஆகிய முன்னேற்றங்களில் வேகம் காட்ட வேண்டியதுதான். ஆனால் கட்டண ஏற்றங்களில் வேகம் காட்ட வேண்டுமா ?'' என்ற சிந்தனையைக் கிளப்பினார் முதன் மந்திரி.

சென்னையில் நடந்த இந்தப் பெரிய விழாவுக்குத் தலைமை தாங்கியவர் இவரே. ரயில்வே போர்டு சேர்மன் காண்டெல்வால் வரவேற்புரை வழங்கினார். தென்னிந்திய ரயில்வே ஜெனரல் மானேஜர் நன்றியுரை கூற, தேசிய கீதத்துக்குப் பிறகு விழா இனிது நிறைவுற்றது.

இந்த மைக்ரோ அலை ரேடியோ டெலிபோன், டெலிபிரிண்டர் வசதிகளினால் தென்னிந்திய ரயில்வேயின் ரயிலோட்டங்களைச் செவ்வனே நிர்வகிக்க முடியும் என்பது ரயில் பிரயாணிகளுக்கு மகிழ்ச்சி தரும் செய்தி. ஆனால், தொடர்பு துரிதமான பிறகும் ரயில்கள் தாமதமாகவே வந்தால் அப்போது ஏற்படும் ஏமாற்றத்துக்கு அளவு உண்டோ? — **பி. எஸ். மணி**

# உங்களுக்கு விருப்பமான
# ஹார்வி துணியைத் தேர்ந்தெடுங்கள்



ஹார்வி

## டுவின் டஸ்கர்



அதிநேர்த்தியான தரமுள்ள துணிகள் — பாப்லின்கள், டிரில் வகைகள், லாங் கிளாத் முதலியன — விலையில் நயமானவை, உறுதியானவை. நீடித்து உழைப்பவை. பல சலவைகளுக்குப் பிறகும் அவைகளின் மிருதுவான அமைப்பும் 'புதுத் தன்மையும்' குன்றிருக்க வேண்டி சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டவை.

ஹார்வி

## ஸாராடோகா

'டெரீன்' காட்டன் ஷர்டு துணிகள்

மாசற்ற நெசவும், பகட்டான தோற்றமுமுள்ள இந்த ஷர்டு துணிகள் மனதுக்குப் பிடித்த பற்பல வண்ணங்களில் அளிக்கப்படுகின்றன.





ஹார்வி

## ஸாராபாண்ட்

'டெரீன்' இணைந்த ஸூட்டிங் துணிகள்

ஆடவர்களின் சீருடைக்கு என்றைக்கும் ஏற்றவை. தேர்ந்தெடுக்க வசதியாக, நேர்த்தியான வெள்ளை நிறத்திலும் மற்றும் லேசான க்ரே முதலிய பல நிறங்களிலும் இவை வழங்கப்படுகின்றன.

*Bensons-1086 / ITAM*

தயாரிப்போர் :
மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை



மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்

அம்புலிக்கு அப்பால்..

12 கதை: புஷ்பா

படம்: விஜயா

அன்றிரவு பேராசிரியர் வீட்டில் கோபி அவரிடம் தனக்கு வந்த ஆபத்தை விவரித்தான்.

ஸார்! நம்முடைய எதிரிகளுக்கு ஆத்திரம் மேலிட்டு விட்டது. முன்பு உங்களைச் சித்திரவதை செய்யத் துணிந்தார்கள்...

..இப்போது என் உயிருக்கு உலை வைக்கத் துணிந்தார்கள். நாம் துரிதமாகச் செயலாற்ற வேண்டும் சார்!

கரெக்ட்! அவர்கள் நம் முயற்சியைச் சதி செய்து முறிப்பதற்கு முன்னால் நாம் வெற்றி பெற்று விட வேண்டும். தைரியமாக இரு! அப்புறம்... கிட்டவா, சொல்கிறேன்!

பேராசிரியர் கோபியிடம் ரகசியம் பேசினார்.

சந்திரசேகருக்கு 'குட் நைட்' கூறிவிட்டு வெளியே வந்தான் கோபி. அங்கு....

ராதிகா! நீ கேட்டுக் கொண்டுதான் இருந்தாயா?

கவலைப்படாதீர்கள்! அப்பா உங்களிடம் ரகசியமாய்ச் சொன்னது என் காதில் விழவில்லை... ஆனால் கோபி....

ஆனால் என்ன ராதிகா..?

வெட்கத்தை விட்டு நான் அதைக் கேட்கத்தான் வேண்டுமா?

நம் திருமணந்தானே? பச்சைக் கிரகத்துக்கு நான் போய்த் திரும்பியதும் ஜாம் ஜாம் என்று...

இதுவரை ஒவ்வொரு கணமும் உங்களுக்கு ஏதோ கண்டம், விண்வெளிப் பயணம்தான் ஆபத்து நிறைந்தது என்றால் பூமியில் கூட நிம்மதியாக வாழ முடியவில்லையே. அப்பாவையும் உங்களையும் பற்றி சதா பயத்துடன் நினைத்து.... கோபி எனக்குப் பைத்தியமே பிடித்து விடும் போலிருக்கிறது!

கோபி ராதிகாவைத் தேற்றினான்.

ராதிகா உன்னுடைய சாதுரியம்தான் எனக்கு பலம். அதை மறக்கவே கூடாது நீ!







மேலும் அந்தப் பிரபாகர் இந்தப் பரீட்சார்த்தமான பயணத்தில் சென்று திரும்பினால் சில விந்தையான நுட்பங்கள் அவனுக்குத் தெரிய வரும். நம்முடைய புத்திரனைச் சக்திக்கு அவற்றை அவனிடமிருந்து கறந்து கொள்ளலாம்!










ஒரு சிட்டிகை
ஆரதி ப்ளூவை
துவைப்பதற்கான
துணிமணிகள் நிறைந்த
பக்கெட்டில்
போட்டால்
உங்களுக்கு
ஏராளமான
மதிப்பைத் தரும்

துணிமணிகள்
நீடித்துழைக்க
பிரகாசமாகவும்
வெண்மையாகவும்
இருக்க
ஆரதி ப்ளூ











ஸேத் கெமிகல்
ஒர்க்ஸ்
160, ஜமுனலால் பஜாஜ்
ஸ்ட்ரீட், கல்கத்தா-7

SCW/G/42 TAM

விநியோகஸ்தர்கள் :

M/s. டி. டி. என். & கம்பெனி
5, லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

# ஞான ஒளி

## காட்சி 12

(இன்ஸ்பெக்டர் லாரன்ஸ் வீடு. லாரன்ஸிடம் வெங்கட்ராம்ஜியும் நல்லசிவமும் அருணாநந்தரைச் சந்தித்து வந்தது பற்றிக் கூறி அவர் புகழ் பாடுகிறார்கள்.)

**நல்லசிவம்:** *சார்! உத்தமன்னா உத்தமன். அடைக்கலம் பாதிரியாருடைய மறு பிறப்புன்னுதான் சொல்லணும்!*

**வெங்கிட்டு:** முன்னே அடைக்கலம் பாதிரியார் என்னென்னவெல்லாம் நடக்கணும்னு ஆசைப்பட்டாரோ அதையெல்லாம் சாதிச்சுட்டார், சார்!

**லாரன்ஸ்:** ஐ, ஸீ! அப்படியா!

**நல்லசிவம்:** (வெங்கிட்டுவைச் சுட்டி): நான் இந்த உத்தமரோட மணி விழா விஷயமாப் போனேன்.

**வெங்கிட்டு:** எது வேணாலும் நானே செய்யறேன். மறுபடியும் நீங்க வந்து கேட்க வேண்டாம்னுட்டார் சார். என்ன பெருந்தன்மை!

**லாரன்ஸ்:** ஆமாம், அவர் எப்படி இருக்கிறார்?

**வெங்கிட்டு:** எப்போதும் தத்துவம்தான் பேசுவார். கண்ணுக்குக் கூலிங் கிளாஸ் போட்டிருக்கார்.

**நல்லசிவம்:** ராத்திரியானாலும் சரி, பகலானாலும் சரி. அதைக் கண்ணை விட்டுக் கழட்ட மாட்டார்!

**லாரன்ஸ்** (சந்தேகத்துடன்): அப்படியா?

**வெங்கிட்டு:** உங்களைக்கூட அவருக்குத் தெரியும்போல இருக்கு.

**நல்லசிவம்:** உங்க 'பெயரை'ச் சொன்னதுமே ரொம்பப் பழக்கப்பட்ட பெயரா இருக்குன்னு சொன்னார் சார்!

**லாரன்ஸ்:** நானும் அவரைப் பார்த்தால் அடையாளம் புரிஞ்சுக்க முடியும்.

**நல்லசிவம்:** நாங்க போயிருந்தப்போ மேரிகூட அவர்கிட்டே தன் மகள் கல்யாண விஷயமாப் பண உதவிக்காக வந்திருந்தா!

**வெங்கிட்டு:** கொடுக்கலையே! பணத்தைக் கடனாகக் கொடுக்கலையே! எவ்வளவு வேணுமோ... தொகையை நீயே பூர்த்தி செய்துக்கன்னு சொல்லி ஒரு வெற்று செக்கிலே அந்தோணின்னு கையெழுத்து மட்டும் போட்டுக் கொடுத்துட்டார்!

**லாரன்ஸ்:** அந்தோணி! ''அந்தோணி''ன்னு கையெழுத்துப் போட்டார்?

**நல்லசிவம்:** அதனாலே ஒண்ணும் குடி முழுகிப் போயிடலையே! அவசரத்திலே அப்படிப் போட்டுட்டார். அப்புறம் தவற்றை மேரி எடுத்துக் காட்டியதும் 'சாரி' சொல்லிட்டு அருணாநந்தர்ன்னு கையெழுத்



த்ப் போட்டு வேறே செக் கொடுத் துட்டார்.

**வெங்கிட்டு:** அவர் வீட்டு வாசல்லே 'தட்டுங்கள் திறக்கப்படும்'ன்னு ஓர்அறிவிப்பு!

**நல்லசிவம்:** அவருடைய பணப் பெட்டியிலே 'கேளுங்கள் கொடுக்கப்படும்'ன்னு ஓர் அறிவிப்பு!

**லாரன்ஸ்:** நான்கூட அவரைப் பார்த்தால் தேவலே....

**வெங்கிட்டு:** எதுக்கு? நீங்க தட்டப் போறீங்களா? இல்லே கேக்கப் போறீங்களா?

**லாரன்ஸ்:** கட்டப் போறேன்!

**நல்லசிவம், வெங்கிட்டு:** என்னது?

**லாரன்ஸ்:** அது கிடக்கட்டும்; அவர் செக் கிலே கையெழுத்துப் போட்டாரே... எந்தக் கையாலே போட்டார்?

**வெங்கிட்டு:** அவர் கையாலேயே போட்டார்!

**லாரன்ஸ்:** அவர் கை என்று தெரியும். எந்தக் கை? வலது கையா? இடது கையா?

**நல்லசிவம்** *(வலது கரத்தை உயர்த்தி):* இதோ இந்தக் கை! அதாவது இடது கை!

**வெங்கிட்டு** *(இடது கையை உயர்த்தி):* இதோ இந்தக் கை! அதாவது வலது கை!

**நல்லசிவம், வெங்கிட்டு:** இடது கை! வலது கை! இடது கை! வலது கை!

(எந்தக் கை என்று தீர்மானிக்க முடியாமல் அவர்கள் குழம்பிக் கொண்டிருக்க, அது பற்றித் தாமே உறுதி செய்துகொள்ளப் புறப் படுகிறார் லாரன்ஸ், அருணாநந்தரின் வீடு நோக்கி.)

## காட்சி 13

(பாதிரியார் கொடுத்த பணத்தை வைத்து வியா பாரம் செய்து கோடீசுவரனாக மாறிவிட்ட - அருணாநந்தர் என்று அழைக்கப்படும் - அந் தோனியின் வீடு.

இருபது ஆண்டுகள் பர்மாவில் வாழ்ந்து தாயகம் திரும்பியவனைக் காண வந்திருக்கிறார் இன்ஸ் பெக்டர் லாரன்ஸ். சரியான ஆதாரமின்றி அவனைக் கைது செய்ய முடியவில்லை. அருண் என்ற பெயரில் ஊரே புகழும் ஓர் உத்தம ராக, மிகப் பெரிய தொழிலதிபராக, பல வியாபார ஸ்தாபனங்களின் உரிமையாள ராகத் திகழ்கிறான் நேற்றைய அந்தோனி. அவனைக் கைது செய்ய முடியவில்லையே என்ற பதற்றத்துடன் அவனைச் சந்திக்க வருகிறார் லாரன்ஸ். அருண் வீட்டு ஹாலில் அவர் நுழைந்த சமயம் எதிரே வேலையாள் வேணு வருகிறான்.)

**வேணு:** வணக்கம்... வாங்கய்யா...

**லாரன்ஸ்:** ஐயா இல்லே?

**வேணு:** இப்பத்தான் சாப்பிடப் போனாரு. உட்காருங்க.

**லாரன்ஸ்** *(கேலியாக):* ஆஹா! தாமத மாக வந்துவிட்டேன்! கொஞ்சம் முந்தி வந்திருந்தால் விருந்துச் சாப்பாடே கிடைச் சிருக்கும்!

**வேணு:** எங்க ஐயாவுக்கு விருந்து உப்புக் கஞ்சிதான், நீராகாரந்தான்.

**லாரன்ஸ்** *(வியப்புடன்):* ம்... அப்படியா?

**வேணு:** அதைக்கூடத் தனியா மண் கலத்திலே எடுத்து வைச்சுடணும்.

**லாரன்ஸ்:** சரிதான்! தொட்டில் பழக்கம்! இருக்கட்டும். 'இந்த ஊர் போலீஸ் இன்ஸ் பெக்டர்... உங்க நண்பராமே, உங்களைப் பார்க்கவந்திருக்கார்'ன்னுஐயாகிட்ட சொல்!

(வேணு போகிறான். பெரிய வரவேற்பு அறையை மெல்லச் சுற்றிப் பார்த்தபடியே வந்து அங் கிருந்த ரேடியோவைத் திருகுகிறார் லாரன்ஸ். அவருடைய மனநிலையை எடுத்துக் காட்டுவது போல் ரேடியோவில் திரை கானம் ஒலிக்கிறது)

**ரேடியோ:** உயர்ந்த மனிதனிலிருந்து ஒரு பாட்டு... 'அந்த நாள்... ஞாபகம்... வந் ததே.... நண்பனே! நண்பனே! ... இந்த நாள்... அன்று போல்... இல்லையே... இல் லையே... அது ஏன்?... நண்பனே!'

(இதைக் கேட்டுக் கொண்டே வருகிறார் அருண். அவரைக் கண்டதும் லாரன்ஸ் ரேடியோவை நிறுத்துகிறார்.)

**அருண்:** குட் ஈவினிங் இன்ஸ்பெக்டர்!

**லாரன்ஸ்:** குட் ஈவினிங்!

(கைகுலுக்கும் பாவனையில் சாமர்த்தியமாக இடது கரத்தை நீட்டுகிறார் லாரன்ஸ்.)

**அருண்:** ஆர் யு லெப்ட் ஹாண்டட் இன்ஸ் பெக்டர்? **(Are you left handed Inspector?)**

**லாரன்ஸ்:** இல்லே, இல்லே; நீங்கதான் இடது கையால் எல்லாக் காரியங்களையும்



செய்வீங்கன்னு யாரோ சொன்னாங்க. சௌக்கியந்தானே? என்னை ஞாபகமிருக்கா?

(இருவரும் வலது கரங்களை நீட்டிக் கை குலுக்குகிறார்கள்.)

**அருண்:** இப்பத்தான் உங்களை முதல் தடவையாகப் பார்க்கிறேன்னு நினைக்கிறேன். ஞாபகம் இருக்கா என்றால்...?

**லாரன்ஸ்:** அதுதான் விசித்திரம்! நினைவைக் கொடுத்த ஆண்டவன் அந்த நினைவிலேயே மனிதன் ஊன்றிவிட்டால் எங்கே அவனாலே எதிர் காலத்தை நினைக்கவோ, செயல்படவோ முடியாமல் போயிடுமோன்னுதான் ஞாபக மறதியையும் கொடுத்திருக்கான்.

**அருண்:** காப்பி சாப்பிடறீங்களா?

**லாரன்ஸ்:** வேண்டாம்! காப்பி சாப்பிடற பழக்கம் கிடையாது!

**அருண்:** ஏதாவது பழ ரசம்? நான் ரொம்ப ருசியாத் தயாரிப்பேன்!

**லாரன்ஸ்:** ஆல்ரைட்! நீங்களே கேட்டு. நீங்க உங்க கையாலேயே தயார் செய்து தரதுன்னா நான் ரொம்ப அதிர்ஷ்டம் பண்ணியிருக்கணுமே!

(அருண் பழங்கள், கத்தி, பாத்திரங்கள் உள்ள மேஜையை நெருங்குகிறார். அவர் சாத்துக்குடியைக் கத்தியால் வெட்டப் போகும்போது என்றோ லாரன்ஸிடம் அரிவாளைத் தொட மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்தது நினைவுக்கு வரவே ஒரு நிமிஷம் லாரன்ஸையே அசையாது கவனிக்கிறார். லாரன்ஸும் அதே நினைவில் ஆழ்ந்து அருணானந்தரைக் கூர்ந்து நோக்குகிறார்.)

(தொடரும்)

**"ஆமாம், செக்கிலே கையெழுத்துப் போட்டாரே, எந்தக் கையாலே போட்டார்...?"**



# நக்கவரம் தீவினிலே..!

அந்தமான் நிக்கோபார் தீவுகள் இயற்கை எழில் நிறைந்தவை. பொங்கும் அலைகள் நிறைந்த கடலின் மத்தியில் ஆங்காங்கே அமைந்துள்ள தீவுகள் பார்ப்பதற்குக் கவர்ச்சியானவை. பச்சைப் பசேலென்ற காடுகள், அவற்றில் தென்னை, கமுகு, மா போன்ற உபயோகமுள்ள மரங்கள்; செடி கொடிகள் — இத்தனையும் நிறைந்து காணும் ஒவ்வொரு தீவும் இப்போது முக்கியத்துவம் பெற்று வருகிறது!



அந்தமான், நிக்கோபார் தீவுகளில் கார் நிக்கோபார் என்பது ஒன்று. இது மற்றத் தீவுகளைப் போல் மேடு பள்ளங்களின்றிச் சமவெளியாகத் திகழ்கிறது. நிக்கோபார் என்பது ''நக்கவரம்'' என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து வந்தது என்பது குறிப்பிடத்தக்கது. பத்தொன்பது தீவுகள் அடங்கிய நிக்கோபார் தீவுக்குக் கார் நிக்கோபார் தலைநகராய் உள்ளது. நிக்கோபார் தீவுகளில் வாழும் 15,000 மக்களில் 10,000 பேர்கள் வரையில் கார் நிக்கோபாரில் வாழ்கிறார்கள்.



இங்கு வாழும் மக்களுக்குப் பெயர் ''ஒல்ச்சகன்.'' ஒல்ச்சகன் என்றால் நண்பன் என்று கூறப்படுகிறது. ஒல்ச்சகன் பர்மியர்களைப் போல் தோற்றம் உடையவர்கள்; குள்ளமாக உள்ள இவர்கள் இளஞ் சிவப்பு நிறமுடையவர்கள்; ஒற்றுமையாக வாழ்கிறார்கள். ஏறக்குறைய அனைவருமே ஒரேவிதத் தோற்றமுடையவர்கள். இதனால் நம்மைப்போல் அதிகப் பழக்கமில்லாதவர்களுக்கு ரொம்பவும் குழப்பம் ஏற்பட்டு விடுவது இயற்கையே.

அந்தமான் தீவுகளின் தலைநகரமான போர்டு பிளேயருக்குச் சென்னையிலிருந்து வந்து செல்கிற கப்பல்கள் கார் நிக்கோபார் வழியாகவே செல்கின்றன. கார் நிக்கோபாரில் ஒரு விமானத் திடல் உண்டு. அது ஜப்பானியர்களால் இரண்டாம் உலக யுத்தத்தின்போது அமைக்கப்பட்டது. இத் தீவைச் சுற்றிக் கடற்கரையோரங்களில் பீரங்கிச் சுரங்கங்கள் பல இருக்கின்றன. எல்லாப் பீரங்கிச் சுரங்கங்களுக்கும் தீவின் நடுவில் ஒரு தலைமைச் சுரங்கம் உண்டு. இதிலிருந்து மற்ற சுரங்கங்களுக்குச் சுரங்கப் பாதைகள் உண்டு. இச்சுரங்கங்களைக் காணும்போது ஜப்பானியர்களின் திறமை விளங்குகிறது. ஜப்பானியர்கள் இத்தீவுகளை ஆக்கிரமித்தபோது நிக்கோபார் மக்களை மிகவும் கொடுமைப்படுத்தியிருக்கிறார்கள்.



இங்கு வாழும் மக்களில் பெரும்பாலோர் கிறிஸ்தவர்கள். பல ஆண்டுகளுக்கு முன்பு இங்கு கிறிஸ்துவ மதத்தைப் பரப்பியவர் சென்னையி

விருந்து வந்த ஒரு தமிழர் என்று கூறப்படுகிறது. தற்சமயம் ஒல்சக்களில் சிலர் முஸ்லிம்களாக மாறியுள்ளனர். நிக்கோபார் தீவுகள் அனைத்தையும் குஜராத்தி மாநிலத்தைச் சேர்ந்த ஒரு பெரிய வியாபாரி ஆங்கிலேயர் காலத்திலேயே குத்தகைக்கு எடுத்து விட்டார். அவரைத் தவிர இப்போது யாரும் இந்தத் தீவுகளில் வியாபாரம் செய்ய முடியாது!

கார் நிக்கோபார் தீவில் பன்னிரண்டு கிராமங்கள் உள்ளன. இவற்றின் பெயர்களைக் கேட்க வேடிக்கையாக இருக்கும். மலக்கா, கக்கனு, சோமல், அராங், சவாயி, மூஸ், பெரிய லப்பாத்தி, சிறிய லப்பாத்தி, தப்போமி, கின்யுக்கா, சுச்சிக்கா, தமாலு பாக்கா என்பன அவற்றின் பெயர்கள் ஆகும்.

ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒவ்வொரு தலைவர் உண்டு! அத்தலைவருக்கு அதிகாரம் மிகுதி. அவரிடம் மக்களுக்கு ரொம்பவும் பயபக்தி. தலைவர் இங்குள்ள





1. முதல் பக்கம் : சைக்கிளோடு நின்றிருப்பது ஒல்சகமாது.

2. ஓடப் போட்டிக்குத் தயாராக இருக்கும் ஒல்சகப் பெண்.

3. கும்பலாக ஒல்சக மாதர்கள்.

4. எதிர்கால உணவுக்கு உண விடுதல்.

5. ஒல்சக மாணவி.

6. ஒல்சகர்களின் குடிசை.

சேவலூர் பி.எஸ்.ஆவடி

மக்களைப் பார்த்து இன்று யாரும் சாப்பிடக்கூடாது என்றால் யாருமே சாப்பிட மாட்டார்கள்! அவ்வளவு கட்டுப்பாடு உண்டு. ஒல்சககளில் ஒரே ஒருவர் பி. ஏ. படித்து உள்ளார்.

ஒல்சககளின் மொழி நிக்கோபாரி. எழுத்து ரோமன் அட்சரத்தை அடிப்படையாகக் கொண்டது. இவர்களின் வீடுகள் வட்ட வடிவ வைக்கோல் போர்கள் போலக் காட்சியளிக்கும். கூரை ஒருவிதப் புல்லால் வேயப்பட்டிருக்கும்.

ஒல்சககளில் நாற்பது வயதானவர்கூட இருபது வயதானவர்போல் காட்சியளிப்பார். இவர்களுடைய முக்கிய வேலைகள், தேங்காயிலிருந்து எண்ணெய் தயாரிப்பதற்கான கொப்பரை சேகரித்தல், பாக்கு வெட்டுதல், கள்ளு உற்பத்தி செய்தல், காட்டில் பலவகை உணவுப் பொருள்களைப் பயிரிடுதல், ஓடத்தில் சென்று மீன் பிடித்தல், பன்றி வளர்த்தல் முதலியன. இவர்களுடைய முக்கிய உணவு மீன், பன்றி இறைச்சி, கிழங்குகள், காய்கறிகள், தேங்காய், இளநீர், கள். தங்கள் உணவை உப்புப்போடாமல் வேக வைத்துச் சாப்பிடுகிறார்கள். உணவோடு கள்ளையும் சேர்த்துக் கொள்வார்கள். இவர்கள் பன்றிக்குத் தேங்காயை உணவாய்க் கொடுக்கிறார்கள். அதனால் பன்றிகள் கொழு கொழு என்று வளர்ந்து அவர்களுக்கு உணவாய்ப் பயன்படுகின்றன.

ஒவ்வொரு குடும்பத்துக்கும் மூன்று வீடுகள் உள்ளன. ஒன்று காட்டில், ஒன்று கிராமத்தில், மற்றொன்று கிராமத்துக்கு ஒதுக்குப் புறமாக. 'பலூஸ்' என்று அழைக்கப்படும் இம்மூன்றாவது வீடு மகப்பேறுக்கு மட்டுமே உபயோகப்படுகிறது.

இங்கு குழந்தைகள் பிறப்பு விகிதம் அதிகம். ஒவ்வொரு குடும்பத்திலும் சர்வசாதாரணமாக ஐந்து குழந்தைகளுக்கு மேல் இருக்கும். ஆண், பெண் அனைவருக்குமே சைக்கிள் ஓட்டத் தெரியும். சைக்கிள் பழகு



வதற்கென்று காலத்தை வீணாக்குவது கிடையாது. மீன் குட்டிக்கு நீந்தக் கற்றுத் தரவேண்டுமா என்பதுபோல் இக்காரியம் நடக்கும். ஒவ்வொரு வீட்டிலும் சுமார் மூன்று அல்லது நான்கு சைக்கிள்களுக்கு மேல்

இருக்கும். பெண்கள் லுங்கியையும், பூப் போட்ட துணிகளால் ஆன ஜாக்கெட்டுகளை யும் அணிந்து கொள்கிறார்கள்.

இவர்களுடைய திருமண முறை விசித்திர மானது. ஆணும் பெண்ணும் காதல் வயப் பட்டுக் குழந்தை பிறக்கும் தறுவாயில்தான் திருமணம் நடக்கிறது. திருமணத்துக்குப் பின் மாப்பிள்ளை பெண் வீட்டுக்குச் சொந்த மாகிவிடுகிறான்.

இங்கு நடக்கும் விழாக்களில் ''படாத் தின்'' என்பது முக்கியம். அன்று அனே வரும் இறைச்சி உண்டு, கள் அருந்தி மகிழ்வர். ஆண்கள் பெரிய பன்றிகளுடன் சண்டையிடுவர். பெண்கள் ஒருவரையொரு வர் கட்டிப் பிடித்துக் கொண்டு பாட்டுப் பாடி மகிழ்வர். ஓட்டப் பந்தயங்களும் நடக்கும்.

கார் நிக்கோபார் தீவிலிருந்து சுமார் நூறு மைல் தொலைவில் கச்சால் என்னும் அழகிய தீவு உள்ளது. இத்தீவு சுமார் எழுபது மைல் சுற்றளவு கொண்டதாகும். இங்கு தற்சமயம் ஆயிரம் மக்கள் வரை வசிக்கின்றனர். இத் தீவுக்கு ராணியாக ஓர் அம்மையார் உண்டு. அவர்தான் இத் தீவுக்குத் தலைவர். இத் தீவு மிகவும் மண் வளம் பொருந்தியது. அடர்ந்த காட்டில் விலை மதிப்புள்ள மரங்கள் நிறைந்துள்ளன. கச்சால் தீவில்தான் இலங்கையிலிருந்து அனுப்பப்பட்டு வரும் தமிழர்களைக் குடி யேற்ற வேலைகள் நடந்து கொண்டிருக்கின் றன. ஐந்நூறு ஏக்கரில் ரப்பர் கன்றுகள் ஏற் கனவே நடப்பட்டு விட்டன.

நிக்கோபார் தீவுகள் நவநாகரிகத் தோற் றம் பெறும் காலம் வெகு தூரத்தில் இல்லை.

# பரதக் கலையில் உயர் நிலை

தெய்விகக் கலையான பரத நாட்டியத்தைப் பிற் காலச் சந்ததிகளுக்கு உருக்குலையாமல் உயர்வு குன்றாமல் நம் நாட்டின் பண்பை விளக்கும் முறையில் காப்பாற்றிக் கொடுக்கச் சிறந்த கலை ஞர்கள் தேவை. அப்படிப்பட்ட கலைஞர்களுள் ஒருவர் குமாரி மைதிலி என்ற எண்ணம் ஜூன் 1ந் தேதி ரஸிக ரஞ்சனி சபாவில் அவரது நடனக் கச்சேரி யைப் பார்த்ததும் ஏற்பட்டது.

கலாக்ஷேத்திரத்தின் மாணவியான குமாரி மைதிலி அங்கு நிலவும் இனிமையான கலைச் சூழ்நிலையில் நிலைத்துக் கடினமான பயிற்சி முறையினால் பல னடைந்திருக்கிறார்.

கண்டநாட்டை அலாரிப்பு விறுவிறுப்புடன் ஆரம் பித்தபோதே கலை கட்டிவிட்டது. ஹுஸேனி ஸ்வர ஜதி, சம்பிரதாய நாட்டியத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாக அமைந்தது. அடவுக் கோவைகள், சௌக்க, மத்யம, துரித காலங்களில் லய சுத்தத் துடன் வடிவு குலையாமல், சாஸ்திர சம்பிரதாயத்தி லின்று வழுவாத உயர்ந்த பாணியில், காண இனிமையாக இருந்தது. அபிநயங்களில் பகட்டும் படாடோபமும் இல்லை; வெளி வேஷமான வெற்று நடிப்பும் இல்லை. சாஹித்தியத்தின் பொருளுடன் ஒன்றி, இதயத்தின் ஆழ்ந்த அனுபவமாக எழும் உணர்ச்சிகளை உண்மையான உள்ளத்தின் பிரதி பலிப்பாக வெளிப்படுத்தினார் குமாரி மைதிலி. இடை யில் மோகினி ஆட்டம் என்னும் மலையாள நடனம், எளிமையும் மென்மையும் பொருந்திய இனிய காட்சியாக இருந்தது.

ஓர் இள மங்கை தன் காதலனுக்காக வெட்கமும் ஆவலும் மீதுறக் காத்திருப்பதைச் சித்திரித்துக் காட்டினார், 'தாரி ஜூசுகன்னதி' என்ற தெலுங்குப் பதத்தில். 'வரட்டும் ஸ்வாமி' என்ற சுப்பராமய்யர் இயற்றிய தமிழ் பதத்தில் முருகன் வள்ளியிடம் கிழவர் வேடம் பூண்டு சென்று, பலவகையில் ஏமாற்றி, மணம் புரிந்து கொண்டதை விளக்கினார்.

இந்த இரு பாடல்களுக்கும் குமாரி மைதிலியின் அபிநயங்கள் மிகச் சிறப்பாக இருந்தன. கோபம், ஏக்கம், அன்பு முதலிய பாவங்களை விறுவிறுப் புடன் மாறி மாறித் தோன்றச் செய்து மனத்தைக் கவரும்படி அபிநயித்தார். குமாரி மைதிலியின் முகத்திலும் கண்களிலும் உணர்ச்சிகளின் ஓட்டம் உயிர்த் துடிப்புடன் தெரி ந்தது. ராக தாளங்களுடன் இணைந்த அங்க அசைவுகளி லும் முத்திரை பிடிக்கும் கைகளிலும் ஓவிய வடிவ மைப்பு மிளிர்ந்தது. கடின மான உழைப்பினால்தான் பரதக் கலையில் இத்தகைய உயர்நிலையை எட்ட முடியும். கற்ற வித்தையின் தரம் குன்றாமல் குமாரி மைதிலி காத்து வருவதை ரஸிகப் பெருமக்கள் போற்றி ஊக்க மளிப்பார்கள். குமாரி மைதிலி நடனம் கற்பிப்பதி லும் வல்லவர். பாட்னாவில் நாட்டிய ஆசிரியையாகப் பணியாற்றி வருகிறார்.

இந்தக் கச்சேரியின்போது இடையிடையே ஆரம்ப நிலை மாணவி குமாரி தேஜின் சில நடனங்களும் இடம் பெற்றிருந்தன.







1. பந்தநல்லூர் ஸ்ரீ பசுபதீசுவர சுவாமி மகாகும்பாபிஷேகம் ஜூன் 6ந் தேதி விமரிசையாக நடைபெற்றது. கும்பாபிஷேகத்தையொட்டி வேத பாராயணம், திருமறை பாராயணம் ஆகியவை சிறப்புற நடந்தன. 2. எம். வீடி. எம். உயர்நிலைப் பள்ளியின் உதவித் தலைமை ஆசிரியர் ஸ்ரீ எஸ். கே. ராமச்சந்திரய்யர் முப்பதாண்டுகளுக்கும் மேலே செய்துள்ள கல்வித் தொண்டைப் பாராட்டி விழாச் சிறப்பாக நடந்தது. 3. பம்பாயில் நடைபெற்ற தேசிய கேரம் போட்டியில் மராட்டிய வீரர் அருண்தேஷ்பாண்டே தமிழக ஆட்டக்காரர் வாஸரை இறுதியாட்டத்தில் வென்றார். நடுவில் அகிலஇந்திய கேரம் கழகக் கன்வீனர் பங்காரு பாபு. 4.,5. ஸ்ரீ அஹோபில மடம் அழகிய சிங்கரின் மேற்பார்வையில் திருவள்ளூர் திருக்குளம் 108 நாட்களில் செப்பனிடப்பட்டு, ஸ்ரீ வைத்ய வீரராகவப் பெருமாளின் அருள் வெள்ளம் பாயப் பல ஆண்டுகளுக்குப்பின் நிறைந்த நீர் நிலையாகத் திகழ்கிறது. இம்மாதம் 13ந் தேதி இப்புஷ்கரிணிக்குத் தீர்த்தோத்ஸவம் நடைபெற்றது. மக்கள் தங்கள் உடல் தாபத்தோடு உள்ளத் தாபத்தையும் தீர்த்துக் கொள்கின்றனர்.







# தீராத விளையாட்டு



## கு. அழகிரிசாமி

ரங்கராஜன் "வீடு திரும்பும்போது மாலை ஐந்து மணிக்கு மேல் ஆகிவிட்டது. நடந்து வரும்போது குறுக்குப் பாதையை விட்டு, வழியைச் சுற்றிக் கொண்டு விஜயாவின் வீட்டு வாசலுக்கு முன்பாகவே அரசடி விநாயகர் கோவில் தெருவில் பிரவேசித்தான். திரும்பிப் பார்த்தான். அவளையும் காணவில்லை. அவள் தங்கையையும் காணவில்லை. ஆனால் அவன் கண்களுக்கு விருந்தாக, அவன் எதிர்பாராத விதத்தில் விஜயா அவன் வீட்டிலேயே இருந்தான்.

விடிந்ததிலிருந்து உற்சாகமில்லாமல் சோர்வோடு பொழுதைக் கழித்த அவனுக்கு விஜயாவின் தரிசனம், கோடையிலே இளைப்பாறிக் கொள்ளக் கிடைத்த குளிர் நிழலாக, தண் சுனையாக இருந்தது. உள்ளம் குளிர்ந்த மாத்திரத்தில் உடம்பெல்லாம் எத்தனையோ சுக உணர்ச்சிகள் தளிர்த்தன. புத்துயிர் பெற்ற மாதிரியே யிருந்தது. தாயாரும் அவளும் சேர்ந்து அவனைப் புன்னகையோடு வரவேற்றார்கள். முத்துக்குமார் தன்னை வரவேற்கும்போது சொன்ன சொற்கள் அவன் நினைவுக்கு வந்தன.

''அம்மா! ஏது, வழி தப்பினுப்லே இப்படி இவங்க வந்திருக்கிருங்க!...'' என்ருன் ரங்கராஜன்.

''விஜயா வந்து ரொம்ப நேர மாச்சு ராஜா'' என்று மட்டும் சொன்னுள் ஜானகியம்மாள். ஒரு பெரிய செல்வம் தானுக வந்து தன் உடைமையாகச் சேர்ந்து விட்டது போன்ற பெரு மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் தோரணையில் பேசினுள் அந்த அம்மாள்.

விஜயா ஒன்றும் சொல்லாமல் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்ருள். வெளியே திரிந்து வாடித் துவண்ட அவன் முகத்தை ஆற்ருமையோடும், பரிவோடும் பார்த்தாள்.

''எங்கே போயிட்டே நீ?'' என்று தாயார் கேட்டாள்.

''சும்மா வெளியே போய் வர்றேன்.''

''விஜயாவுக்குக் கோபம் — அவள் வீட்டுக்கு நாம் வரலேயேன்னு.''

உடனே விஜயா சொன்னுள்: ''வழி தப்பிக்கூட வரமாட்டேங்கிறீங்களே!''

''அப்படி யெல்லாம் ஒண்ணுமில்லே'' என்ருன் அவன்.

''அப்புறம் எதுக்காக வரமாட்டேங் கிறீங்க?'' என்று இருவரையும் பார்த்துக் கேட்டாள் விஜயா.



''சரி, டிபன் சாப்பிடு வா. ரொம்ப நேரமாயிட்டது'' என்ருள் தாயார்.

''விஜயா சாப்பிட்டாங்களோ?''

''நீ வந்துதான் சாப்பிடணும்னு இருக்கிருேம். யாருமே இன்னும் காப்பி சாப்பிடல்லே. உங்க அப்பா ரெண்டு தடவை உன்னே எங்கேன்னு கேட்டுட்டு வெளியே போயிருக்




# மபத்லால் க்ரூப்
## பாப்ளின் & ஷர்ட்டிங்

காட்டன் மற்றும் 'டெரின்'/ காட்டன், 2x2 'டெரின்'/ காட்டன், பிரின்டெட், டெரிவஸ்டு & மசிரைஸ்டு ரகங்கள்.

மெய் சிலிர்க்கும் பிரின்டுகள், பளிச்சிடும் வண்ணங்கள், குளுமையூட்டும் கோடுகள், நெஞ்சையள்ளும் நீல நிறங்கள், வித விதமான மபத்லால் புஷ் ஷர்ட்டிங் துணிகளிலிருந்து விரும்பியதைத் தேர்ந்தெடுங்கள். எத்தருணத்திற்கும் ஏற்ற துணிகளே அளிக்கிறது மபத்லால்.

**எத் தருணத்திற்கும் ஏற்ற புஷ்-ஷர்ட் துணிகள்**

கிறார். உன்னைத் தேடித்தான் போயி ருக்கிறாரோ என்னவோ?''

''என்னைத் தேடுவானேன்? வெளியே போனவன் வீட்டுக்கு வராமல் இருப் பேனா? என்னைக் காக்காயா தூக்கிக் கிட்டுப் போயிடும்?''

குழாயடிக்குப் போய் முகத்தையும் கால்களையும் கழுவிக் கொண்டு வந் தான். ஒரு தடுக்கை எடுத்துப் போட் டுக்கொண்டு உட்கார்ந்தான்.

''நீங்களும் உட்காரலாமே!'' என் றான், விஜயாவைப் பார்த்து.

''பரவாயில்லே. நான் அப்புறம் சாப்பிடுகிறேன்'' என்றாள் விஜயா.

அப்போது ஜானகியம்மாள், ''நீயும் ஒரு பக்கம் உட்காரம்மா. எவ்வளவு நேரமாயிட்டது'' என்று சொல்லி, இரண்டு வெள்ளித் தட்டுக்களில் பல காரங்களை எடுத்துக் கொண்டு வந்தாள்.

உட்கார்ந்திருந்த ரங்கராஜன் எழுந்து மற்றொரு தடுக்கை எடுத்து, சற்று எட்டினாற்போல் போட்டு, ''உட்காருங்கள்'' என்றான்.

விஜயாவுக்கு ஒரே சிரிப்பாக இருந் தது — தடுக்கைக் கொண்டு வந்து, அலாதியாக ஓரிடத்தில் போடுவதைப் பார்த்து.

''நீங்கள் வீட்டிலே மேஜையிலே டிபன் வைத்துச் சாப்பிடுவீங்க. கீழே உட்காருவது உங்களுக்குக் கஷ்டமாக இருக்கும்.''

''நாங்களும் கீழே உட்கார்ந்துதான் சாப்பிடுவோம்...'' என்ற விஜயா சிரித் துக்கொண்டே உட்கார்ந்தாள்.

அவளோடு ஒன்றாக உட்கார்ந்து சாப் பிடும் அந்த முதல் அனுபவம் அவ னுக்கு எல்லையற்ற இன்பத்தைக் கொடுத்தது. அவன் முகத்தையே அடிக்கடி பார்த்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்த அவளை நோக்கி ''எங்க வீட்டு டிபன் பிடிக்கிறதா? இவ்வளவு நேரம் எப்படிப் பசியோடு இருந் தீங்க?'', ''உங்கள் தங்கை எங்கே?'' ''ஒண்ணையும் தொடலையே! ஏன்? சாப் பிடுங்க.'' ''அம்மா, இவங்களுக்கு இன் னும் கொஞ்சம் அல்வா கொண்டு வந்து வை'' என்றெல்லாம் சொல்லிக் கொண்டே இருந்தான்.

''ராஜா! கடைசி வெள்ளிக்கிழமை இவங்க வீட்டிலே திருப்பரங்குன்றத் துக்குப் போறாங்களாம். நம்மளையும் விஜயா கூப்பிடறா'' என்றாள் ஜானகி யம்மாள்.

''போவோமே. இன்னிக்கே கூடப் போகலாம் போலிருக்கு'' என்று ரங்கராஜன் சொல்லிவிட்டு விஜயா வின் முகத்தைப் பார்த்தான்.

''எங்க காரிலேயே போகலாம். உங்களுக்கு ஆட்சேபணை இராதுன்னு நினைக்கிறேன்'' என்றாள் அவள்.

''சர்க்கரைப் பொங்கலிலே தேன் மாரி பொழிஞ்ச மாதிரி! இதை யார் வேண்டாம்னு சொல்லுவா...''

இந்தச் சமயத்திலே நடராஜ முதலி யார் வெளியிலேருந்து திரும்பி வந் தார். வரும்போதே ''ராஜா வந்துட் டானா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

உள்ளே அவனும், வேறொரு பக்கத் தில் விஜயாவும் உட்கார்ந்து சாப்பிடு வதைப் பார்த்தார்.

''நீங்களும் உட்காருங்களேன்'' என்று ஜானகி அம்மாள் சொல்லும் போது, விஜயா அவருக்கு மரியாதை கொடுக்கும் முறையில் எழுந்து நின்றாள்.

''அப்புறமாச் சாப்பிடறேன்'' என்று சொல்லிவிட்டு அவர் உடனே மாடிக் குப் போய்விட்டார்.

இருவரும் சாப்பிட்டு எழுந்தார்கள். அவர்கள் அந்த இடத்தை விட்டு வெளியே வந்ததும், சொல்லி வைத் தாற்போல் நடராஜ முதலியாரும் மாடியிலிருந்து இறங்கி வந்தார். அவர் ரங்கராஜனையோ விஜயா வையோ திரும்பிப் பார்க்காமல் நேரே உள்ளே வந்து உட்கார்ந்தார்.

ரங்கராஜன் மாடிப் படி அருகே சென்று அவளைப் பார்த்துத் தயங்கித் தயங்கி நின்றான். விஜயாவை அங் கிருந்தே வழியனுப்பி விடுவதா, மாடிக்கு அழைப்பதா என்று தெரிய வில்லை. இரண்டையும் செய்ய அப் போது அவனுக்குத் துணிவில்லை. அவள் எங்கே விடை பெற்றுக்கொண்டு அப்படியே தன் வீட்டுக்குப் போய் விடுவாளோ என்று பயமாகவும் இருந் தது.

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டே நின்றார்கள்.

''அப்புறம்?...'' என்று கேட்டுவிட்டு ரங்கராஜன் சிரித்தான்.

விஜயா ஒன்றும் சொல்லாமல் நின்றாள்.

''மாடியைப் பார்க்கிறீங்களா? பாருங்களேன்! பார்த்து மதிப்புப் போடுங்க! உங்க அப்பா விலைக்கு வாங் கப் போறாராமே! அதனாலே சுற்றிப் பார்த்து நீங்களே ஒரு மதிப்பு போட்டு உங்கப்பாகிட்டச் சொல்லலாமே!''

ரங்கராஜன் இவ்வாறு சொன்னதும் அவள் நெருங்கிச் சென்றாள். 'நீங்கள் முன்னே போங்கள். நான் பின்னால்

அடுத்த ஆண்டு ரொம்ப உயர்ந்ததாக இருக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். என் ஜோசியத்தில் சந்தேகமிருந்தால் 60-ம் பக்கம் புரட்டவும்!

வருகிறேன்' என்று சொல்லும் பாவனையில் வந்து நின்றாள்.

''வாருங்க'' என்று சொல்லி விட்டு ரங்கராஜன் படியேறி மேலே சென்றான் விஜயாவும் பின்தொடர்ந்து சென்றாள்.

மாடி ஹாலை விட்டு மொட்டை மாடிப் பகுதியை அடைந்ததும், சுகமான அந்த அந்தி மாலைப் பொழுதில் தென்றல் அடித்துக் கொண்டிருந்தது. விஜயா சொன்னாள்: ''வெளியிலிருந்து வந்து, இன்னும் நீங்கள் தலைகூட வாரிக்காமல் இருக்கிறீர்களே. கண்கள் அநியாயமாச் சிவந்திருக்கு.''

அவ்வளவு நேரமும் அலங்கோலமாகக் கிடக்கும் அவனுடைய முக அழகை, மீண்டும் ஒன்று கூட்டி, சரிப்படுத்தி, பூரண தேஜஸோடு அவன் முகம் காட்சியளிப்பதைக் காணத் துடித்துக் கொண்டிருந்த அவளுடைய ஆசையையும் தவிப்பையும் வாய் விட்டே சொல்லி விட்டாள். தன் முகத் தோற்றத்தை எவ்வளவு கண்ணும் கருத்துமாக அவள் கவனித்துக் கொண்டிருக்கிறாள் என்பதை அவனும் உணர்ந்து கொண்டான்.

''நான் எப்படி இருந்தால் என்ன?''

'' எப்படி இருந்தாலும் ஒண்ணு, தான். இருந்தாலும் தலையை வாரிக் கொள்ளலாம். உங்க அம்மாவாவது சொல்லுவாங்கன்னு பார்த்தேன். சொல்ல மறந்துட்டாங்க போலிருக்கு. போய்த் தலையை வாரிக்குங்க.''

ரங்கராஜன், ''சரி'' என்று சொல்லி விட்டுத் தன் அறைக்குள் நுழைந்தான். அவளும் கூடவே சென்றாள்.

அவன் கண்ணாடி முன்னால் நின்று தலை வாரிக் கொள்ளும்போது அவள் பார்த்துக் கொண்டே நின்றாள். இருவர் முகங்களும் கண்ணாடியில் சிரித்துக் கொண்டிருந்தன.

''இப்படியெல்லாம் நீங்க இங்கே வர்றதைப் பத்தி உங்க வீட்டிலே ஒண்ணும் சொல்ல மாட்டாங்களா? நீங்க சுந்தரியை வழியனுப்பக் கார் கொண்டு வந்ததைப் பார்த்தபோதே இந்தக் கேள்வியைக் கேட்கணும்னு எனக்குத் தோணினது....''

'' நானும் இதே கேள்வியைக் கேட்கலாம்தானே?''

'' எப்படி?''

''நான் இப்படித் தனியா உங்களோட வந்து மாடியிலே பேசிக்கிட்டிருக்கிறதைப் பத்தி உங்க அப்பா அம்மா ஒண்ணும் நினைக்க மாட்டாங்களா? ரெண்டு பேரும் கீழே இருக்கிறாங்க. நீங்க தைரியமா என்னை மாடிக்கு அழைச்சுக்கிட்டு வந்துட்டீங்களே!''

'' என்கிட்டே என் பெற்றோர்களுக்கு அபார நம்பிக்கை.''

''அதேமாதிரி என் பெற்றோர்களுக்கு என்கிட்டே அபார நம்பிக்கை இருக்கக் கூடாதா, என்ன?''

விஜயாவை அவன் திரும்பிப் பார்த்தான்.

''ரொம்ப ஆச்சரியம்தான்!'' என்றான் ரங்கராஜன்.

சீப்பைக் கீழே போட்டு விட்டு நகர்ந்தான்.

''வகிடு சரியா எடுக்கல்லே. இன்னும் கோணலாத்தான் இருக்கு. கண்ணாடியிலே பாருங்க'' என்றாள் விஜயா.

ரங்கராஜன் திரும்பவும் கண்ணாடியின் அருகில் சென்றான். விளக்கையும் போட்டான். ''நிஜம்தான்'' என்று சொல்லி விட்டு, வகிடைச் சரியாக எடுத்து வாரி விட்டுக் கொண்டான்.

இருவரும் ஹாலுக்கு வந்து உட்கார்ந்தார்கள்.

''இப்பத்தான் உங்க அம்மா முகத்தோட சாயல் அப்படியே இருக்கு.''

''இருக்கட்டும். திருப்பரங்குன்றத்துக்குப் போகிறதுக்குள்ளே நான் மெட்ராஸுக்குப் போய்ட்டு வர வேண்டிய காரியம் இருக்கு.''

'' எப்போ?''

''இன்னும் பத்து நாளிலே புறப்படுவேன். மனசில்லாமல்தான் போறேன்.''

'' எதுக்காக?''

''எங்க சித்தப்பா சொல்றார், நான் சீக்கிரம் வக்கில் ஆயிடணும்னு. போர்டு போட்டதும் என்னவோ ஆயிரம் ஆயிரமாப் பணம் வந்து குவியப் போற மாதிரி அவர் நினைப்பு!''

'' யார் கண்டா? உங்க அதிர்ஷ்டம் பலமா இருக்கிறப்போ ஆயிரம் ஒரு பிரமாதமா?''

'' எனக்கு என்னவோ இதிலே கொஞ்சம்கூட இஷ்டமில்லே. ஏன்டா, பி. எல். படிச்சோம்னு இருக்கு. என் கூடப் படிச்ச ஒருத்தர், இந்த ஊரிலே வக்கிலா இருக்கிறார். இன்னிக்கு அவரைப் பார்க்கத்தான் வெளியே போயிருந்தேன். அவர்

# சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

271, அங்கப்ப நாயக் தெரு, சென்னை-1

தந்தி விலாசம் : ''அர்பாங்க்''
தபால் பெட்டி எண் : 226

தொலை பேசி எண் :
22766, 22767, 24589

எங்கள் வங்கியில் நீங்கள் போடும் டெபாசிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத்திற்கும் விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்.

---

**சேவிங்ஸ் டிபாசிட் :** ரூ. 1,000 அதற்கு மேலும் (வருடத்திற்கு)

| | | |
|---|---|---|
| 15 நாட்கள் முதல் | 45 நாட்கள் வரை | 1.25% |
| 46 நாட்கள் முதல் | 90 நாட்கள் வரை | 2.50% |

**பிக்செட் டிபாசிட் :** ரூ. 1,00 அதற்கு மேலும்

| | | | | |
|---|---|---|---|---|
| 91 நாட்களும் | அதற்கு மேலும் | 6 | மாதங்களுக்குள்ளாக | 4.50% |
| 6 மாதங்களும் | .. | 12 | .. | 5.00% |
| 12 மாதங்களும் | .. | 2 | வருடங்களுக்குள்ளாக | 5.75% |
| 2 வருடங்களும் | .. | 3 | .. | 6 % |
| 3 வருடங்களும் | .. | 5 | .. | 6.25% |
| 5 வருடங்களும் அதற்கு மேலும் | | | | 6.75% |

**ரெக்கரிங் டிபாசிட் :** தவணைகளுக்குப் பெறும் மொத்தப் பணம் :

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மாதத் தவணை | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ. 5ம் அதன் மடங்குகளும் | 62 | 128 | 198.50 | 273 | 355 | 442 | 535 |

---

இதர விபரங்களை வங்கியின் கீழ்க்கண்ட அலுவலகங்களிலிருந்தும் பெறலாம்

| கிளை அலுவலகம் பெயர் | முகவரி | தொலை பேசி எண் : |
|---|---|---|
| மயிலாப்பூர் : | 32-A, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4 | 71262 |
| எழும்பூர் : | 68, எழும்பூர் ஹைரோடு, சென்னை-8 | 86510 |
| திருவல்லிக்கேணி : | 111, பெரிய தெரு, சென்னை-5 | 84692 |
| தியாகராயநகர் : | 19, பாண்டி பசார், சென்னை-17 | 442852 |
| காந்தி நகர் : | 78, இரண்டாவது மெயின் ரோடு, சென்னை-20 | 71132 |
| ஜெஜய் நகர் : | 8/1, செங்குந்த முதலித் தெரு, சென்னை-30 | 64834 |
| கெல்லீஸ் : | 2, மாதவாக்கம் டாங்க் ரோடு, சென்னை-10 | 64105 |
| மயிலாப்பூர் டாங்க் : | 10, தெற்கு மாட வீதி, சென்னை-4 | 73158 |
| சாந்தோம் : | 79, சாந்தோம் ஹைரோடு, சென்னை-28 | 74300 |
| கிரீன்வேஸ் ரோடு : | 14, கேசவபெருமாள்புரம், சென்னை-28 | 74215 |
| மவுண்ட் ரோடு : | 109, டி.-ஈ. மவுண்ட் ரோடு, சென்னை-18 (காமதேனு கூட்டுறவு சிறப்பு அங்காடி) | 440292 |
| சாஸ்திரி நகர் : | பி. 10, சாஸ்திரி நகர், சென்னை-20 | 76418 |

---

**ஆர். கனகசபை, எம்.எல்,ஏ.**
தலைவர்

**டி. வர்த்தமானன்**
காரியதரிசி

## உங்கள் வதனம் மலரிதழ் மென்மையும் இளமையின் பொலிவும் பெற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்




உங்கள் சருமத்தில் இயற்கையாக இருக்கிறது ஈரத்தன்மை. அதைப் பாதுகாக்கிறது பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமிலுள்ள விசேஷ 'ஹ்யுமெக்டன்ட்'. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் மென்மையும், மிருதுத்தன்மையும் இளமையும் அளிக்கின்றது. தூசு, சீதோஷ்ண மாறுதல் ஆகியவற்றில் இருந்து உங்கள் சருமத்தை பாதுகாக்கின்றது. வெண்பனி போன்ற லேசான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை தனியாகவும் உபயோகிக்கலாம்; முகப்பவுடருக்குப் படிமானமாகவும் உபயோகிக்கலாம். அப்போது ஒப்பனையும் மணிக்கணக்கில் கலையாமல் கவர்ச்சியாக விளங்கும்.

சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்போரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ். ஏவில் இணைக்கப்பெற்றது)

'பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்
பவுடர் பூச்சிற்குத் தலைசிறந்த ஓர் படிமானம்

P-4933a

சொல்றதைப் பார்த்தால், எனக்கு இன்னும் சோர்வு தட்டுது. இவ்வளவு காலமும் கழிச்ச வாழ்க்கை வேறே; இனி கழிக்கப் போற வறண்டு போன வாழ்க்கை வேறே. இப்போ மோசமான ஒரு திருப்பம். என்ன பண்ணறது?''

''வருமானம் வர்றப்போ எல்லாம் சரியாய்ப் போயிடும். இப்போ அப்படித் தோணும்'' என்றாள் விஜயா.

இதைக் கேட்டதும் ரங்கராஜனுக்குச் சிறிது ஆசுவாசமாக இருந்தது.

''பார்ப்போம். உங்க அப்பா இந்த வீட்டை வாங்குறதுன்னு முடிவு பண்ணிட்டாரா?'' என்று அவன் கேட்டான்.

''எனக்கே சரியாத் தெரியாது. எப்பவோ ஒரு நாள் அம்மாகிட்டே சொன்னதா ஞாபகம். ஏன்? நீங்க வாங்கப் போறீங்களா?''

''எங்க சித்தப்பா அப்படித்தான் சொல்றார். இதைப் பத்தி நான் இது வரையிலும் யோசனை பண்ணினதே இல்லே.''

''நீங்க வாங்கப் போறதா இருந்தால், அப்பாவை வாங்க வேண்டாம்னு சொல்லிப்பிடுறேன்.''

''நீங்க சொன்னால் கேட்பாரா?''

''அதைப் பத்தி உங்களுக்குச் சந்தேகமே வேண்டாம்.''

''ஓ! இருக்கட்டும். நான் யோசனை பண்ணி அப்புறமாச் சொல்றேன். எப்படியும் மதுரையிலே நாங்க வீடு வாங்கப் போறது நிச்சயம். எங்கே அமையுதோ, தெரியவில்லே.''

''வாங்குறதுன்னா இந்த வீட்டையே வாங்குங்க.''

''ஏன்?''

விஜயா ஒன்றும் சொல்லாமல் எழுந்து நின்று முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டு எதையோ பார்த்துக் கொண்டு நின்றாள்.

ரங்கராஜனும் எழுந்து, ''எதுக்காக அப்படிச் சொல்றீங்க?'' என்று கேட்டான்.

''சும்மாதான் சொன்னேன்'' என்று சொல்லி விட்டு மொட்டை மாடியை நோக்கி நடந்தாள்.

தொடர்ந்து நடந்து வரும் ரங்கராஜனைப் பார்த்துத் திரும்பி, ''நான் வீட்டுக்குப் போறேன். உங்களை ஒரு நாள் தனியாச் சந்திச்சா, உங்ககிட்டே மன்னிப்புக் கேட்கணும்னு காத்திருந்தேன். இன்னிக்குச் சந்திச்சிட்டேன்....'' என்று சொன்னாள்.

''ஏன், மன்னிப்பு எதுக்கு?''

''நீங்க சாத்தூரிலேயிருந்து திரும்பி வர்றப்போ, ரிக்ஷாவிலே இருந்தவாக்கிலேயே என்னைப் பார்த்து நமஸ்காரம் பண்ணினீங்க. நான் பதிலுக்கு நமஸ்காரம் பண்ணலை. அதுக்காக என்னை மன்னிச்சிடுங்க....''



''தினசரி வேலைக்காரி கூச்சல் போடும்படி ஏன் வைக்கிறே? காலையில் ஆறு மணிக்குக் காப்பி தந்துவிட்டேன்!''
''அது போதாதாம்! அவளுக்கும் பெட் காப்பி வேணுமாம்!''

''விஜயா!'' — தன்னை அறியாமல் அவள் பெயரைச் சொல்லி அழைத்து விட்டான் ரங்கராஜன்.

''விஜயா! எனக்கு மன்னிக்கவே தெரியாது. அதோட, ஒரு சாதாரண விஷயத்துக்கு இவ்வளவு நாள் கழிச்சு மன்னிப்புக் கேட்பானேன்?''

''நீங்க மன்னிக்கத்தான் வேணும்.''

''பதிலுக்கு இப்போ ஒரு தடவை நமஸ்காரம் பண்ணிட்டாப் போச்சு. அவ்வளவுதானே?''

''அப்படிப் பிராயச்சித்தம் பண்ணிட முடியாது. என்னை மன்னியுங்கோ. இப்போ எத்தனை நமஸ்காரம் வேணும்னாலும் உங்களை பண்ணுறேன். காலிலே விழுந்தும் நமஸ்காரம் பண்ணுறேன்'' என்று சொல்லிக் கொண்டே, கீழே விழப் போகிறவள் போல் குனிந்தாள்.

''ஐயோ! இது என்ன வேலை? வேண்டாம்'' என்று சொல்லிக் கொண்டே தடுத்துப் பார்த்தான். முடியவில்லை. காலைத் தொடப் போய் விட்டாள். ரங்கராஜன் அவளுடைய தோள்களைப் பற்றிப் பிடித்துத் தடுத்து விட்டதோடு, தூக்கி நிறுத்தியும்விட்டான். அவள் அவன் முகத்தைப் பார்க்காமல் குனிந்து கொண்டு நின்றாள். அவள் உடம்பெல்லாம் ஆடியது.

''விஜயா!....''

''நான் வீட்டுக்குப் போறேன்.''

''மன்னிக்க ஏதுமில்லை, விஜயா! அப்படியே இருக்குதுன்னு வைச்சுக்கிட்டாலும் உன்னைப் போல் ஒரு பெண்ணை ஒருத்தன் மன்னிக்கவில்லை என்றால் அவன் கல்மனசுக்காரனாகத்தான் இருக்கணும். நான் அப்படிப் பட்டவனில்லை. நீ... நீங்க, என் கிட்டே உயிரையே வச்சிருக்கிறீங்க. மன்னிக்கணுமா ?''

'' நான் வர்றேன். உங்ககிட்டே நான் நிறையப் பேசணும். சாவகாசமா வர்றேன். நீங்கதான் வரமாட்டீங்க.''

''விஜயா! எனக்கு என்னவோ தயக்கமா இருக்கு. மற்றப்படி வரக் கூடாதுன்னு ஒண்ணுமில்லை.''

''ஒரு தயக்கமும் வேண்டாம். எங்க அப்பாவைப் பத்தி உங்களுக்குத் தெரியாது. நீங்க ஆயிரம் தடவை எங்க வீட்டுக்கு வரலாம். என்னிடத்திலே எங்க அப்பாவுக்கு அவ்வளவு நம்பிக்கை உண்டு. நான் வரட்டுமா?'' என்று சொல்லிக் கொண்டே விஜயா வேகமாகக் கீழே இறங்கிப் போய் விட்டாள்.

ரங்கராஜன் அவளிடம் எத்தனையோ விஷயங்களைக் கேட்க நினைத்திருந்த போது, அவள் திடீரென்று விடை பெற்று ஓடிவிடவே, மிகுந்த ஏமாற்றத்துக்கு உள்ளாகி ஒன்றும் தோன்றாமல் நின்று விட்டான்.

மறுநாளே ரங்கராஜன் விஜயாவின் வீட்டுக்குச் சென்றான்.

மதுரையில் வக்கீல் நண்பன் முத்துக்குமாரின் வீட்டைத் தவிர வேறு யாருடைய வீட்டுக்கும் இதுவரையிலும் அவன் சென்றது கிடையாது. ஒருவரைத் தேடி ஒரு வீட்டுக்குச் செல்வதென்பதே அவனுக்கு முற்றிலும் புதியதோர் அனுபவம். அதிலும் விஜயாவின் வீட்டுக்குச் செல்வது அவனுக்கே வியப்பை உண்டுபண்ணும் ஒரு காரியமாக இருந்தது. முதலில் அங்கே போவதற்கு யாதொரு விதமான முகாந்திரமும் இல்லை. இரண்டாவதாக ஓர் இளம் பெண்ணின் சிநேகத் தொடர்பைப் பற்றிக் கொண்டு செல்ல வேண்டியிருந்தது. அப்போது ஓர் அந்நிய வீட்டுக்கு மட்டுமல்ல; அந்நிய உலகத்துக்கே போவது போல் அவனுக்குத் தோன்றியது. இதுவரையிலும் கேள்விப்பட்ட தகவல்களைக் கொண்டு பார்க்கும்போது, அந்த வீட்டில் அத்தனை பேரும் நல்லவர்களாக இருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் எவ்வளவு நல்லவர்களாக இருந்தாலும், 'கல்யாணமாகாத உங்கள் வீட்டு யுவதி எனக்கு அழைப்பு விடுத்தாள், அதை ஏற்றுக் கொண்டு, கல்யாணமாகாத இளைஞனாகிய நான் வந்திருக்கிறேன்' என்று சொல்லிக் கொண்டு போய் நிற்க முடியுமா?

ரங்கராஜன் பன்முறை புனராலோசனை செய்தான். தயங்கிக் கொண்டே தன் அறைக்குள் சுற்றிச் சுற்றி வந்தான். ஆனால், போகாமல் இருந்துவிட மட்டும் அவன் மனம் ஒப்பவே இல்லை. காலும் மனமும் துடித்துக் கொண்டிருந்தன. கடைசியில், விஜயா தன் தந்தையைப் பற்றிச் சொன்ன வார்த்தைகளையும், அவள் தன் வீட்டுக்குக் கார் கொண்டு வந்ததையும் நினைத்துப் பார்த்தபோது தான் துணிவு பிறந்தது. 'எங்கள் அப்பாவைப் பற்றி உங்களுக்குத் தெரியாது' என்று முந்தின நாள்தான் சொன்னாள் விஜயா. அந்த வார்த்தைகளுக்கு என்ன பொருள்? 'என்னிடத்தில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை' என்றும் சொன்னாள். அப்படியானால், தன்னுடைய புதல்வி ஓர் ஆண் மகனுடன் பேசிப் பழகுவதையும், நட்புக் கொள்வதையும் அனுமதிக்கவும், அங்கீகரிக்கவும் கூடிய ஓர் அதிசய புருஷர் என்று பொருளா? தம் பெண்ணுக்கு எல்லா விஷயத்திலும் பூரண சுதந்திரம் கொடுத்திருப்பவர் என்று அர்த்தமா?

யோசிக்க யோசிக்க ரங்கராஜனுக்கு அப்படித்தான் பொருள், அப்படித் தான் அர்த்தம் என்று ஊர்ஜிதமாகிக் கொண்டே வந்தது.

அப்படிப்பட்டவராக இருப்பதால் தான் போன் பண்ணிய மாத்திரத்தில் மகள் சொன்ன இடத்துக்குக் காரை அனுப்பி வைத்திருக்கிறார் என்று அவனுக்குத் தோன்றியது.

எங்கே போகிறேன் என்று அவன் தாயாரிடமும் சொல்லிக் கொள்ளவில்லை. நேரே விஜயாவின் வீட்டை நோக்கிச் சென்றான்.

அவனுடைய வரவுக்குக் காத்திருப்பவள் போல் வாசலில் நின்று கொண்டிருந்த அவள் அவனைப் பார்த்ததும் கைகூப்பினாள். ''வாருங்கள்'' என்றாள். அவன் வாசற்படியில் கால் வைத்ததும், ''நீங்கள் வேறே எங்கேயாவது போறப்போ நான் தடுத்துக் கூப்பிடுகிறேனா?'' என்று கேட்டாள்.

''வேறே எங்கேயும் போகவில்லை!'' என்றான் அவன்.

''நான் வாசலிலே வந்து நிற்காமல் இருந்திருந்தால், நீங்க இங்கே வந்திருப்பீங்களா?''

ரங்கராஜன் அவள் முகத்தைப் பார்த்துச் சிரித்தான். ''ஏன் இப்படிக் கேட்




# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகளில் நிறைய பால் சத்தோடு, விரைவாக வளரும் குழந்தைக்குத் தேவையான இதர போஷாக்குச் சத்துக்களும் நிறைய இருக்கின்றன. உங்கள் குழந்தைக்கும் சத்துள்ள பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் கொடுங்கள்.







என்றாலே உயர்தரம்

BBC. 8491R

இறீங்க? உங்க வீட்டுக்கு வரணும்னே வர்றேன்'' என்றான்.

முதலில் அவளும் அவளைத் தொடர்ந்து அவனும் உள்ளே பிரவேசித்தார்கள்.

அவனை ஒரு சோபாவில் அமரச் செய்துவிட்டு, உள்ளே திரும்பி, ''கலா! கலா!'' என்று தங்கையை அழைத்தாள் விஜயா.

கலா உள்ளேயிருந்து வந்தாள்.

''யாரோ வந்திருக்காங்க!'' என்று தங்கையிடம் சொன்னாள். 'யார்?' என்று கேட்டுக் கொண்டே வந்து, ஹாலில் நுழைந்ததும், ரங்கராஜனைப் பார்த்தாள் கலா. ஆச்சரியத்தால் அவள் கண்கள் விரிந்தன. ஒன்றும் தோன்றாமல் ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றாள். அப்புறம் திடீரென்று வெட்கம் வந்து தலை குனிந்து வணக்கம் செய்தாள். உடனே அவ்விடத்தை விட்டு உள்ளே ஓடித் தன் தாயாரை அழைத்துக் கொண்டு வந்தாள். அந்த அம்மாளைக் கண்டதும் ரங்கராஜன் எழுந்து நின்று கரம் கூப்பினான்.

''வாருங்க, உட்காருங்க'' என்று சொல்லி விட்டு, ''தங்கச்சி ஊருக்குப் போயாச்சு போலிருக்கு'' என்று சம்பிரதாயத்துக்குப் பேசினாள் அந்த அம்மாள்.

''ஆமாம்'' என்றான் ரங்கராஜன்.

''நல்ல பொண்ணு. வந்து இத்தனை நாள் இங்கே இருந்திருக்கிறாள். கடைசியிலே, ஊருக்குப் போறதுக்குச் சொல்லிக்க வந்தப்போதான் பார்த்து நாலு வார்த்தை பேச முடிந்தது.''

''நாலு வார்த்தை என்ன, நாலு நாட்கள் கூட உட்கார்ந்து பேசலாமே. நாம்பதான் திருச்சிக்குப் போகப் போறோமே!'' என்று தாயாரைப் பார்த்துச் சொல்லிவிட்டு, ரங்கராஜனிடம், ''உங்களுக்குத் தெரியுமோ? உங்க 'சிஸ்டர்' எங்களைத் திருச்சிக்கு வரச் சொல்லி 'இன்விடேஷன்' கொடுத்திருக்கிறாள். நாங்களும் வரதாச் சொல்லியிருக்கிறோம்'' என்றாள் விஜயா.

''ரொம்ப சந்தோஷம்! எனக்குத் தெரியாதே!'' என்றான் அவன்.

விஜயா அவனுக்கு எதிரே உட்கார்ந்தாள். கலாவும் வந்து பக்கத்தில் அமர்ந்தாள். அந்த அம்மாள் ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்தாள்.

சில நிமிஷங்கள் ஏதாவது பேச வேண்டும் என்பதற்காக மனத்துக்குத் தோன்றியபடி ஆளுக்கு இரண்டு வார்த்தைகள் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது வாசலில் கார் வந்து நின்றது. அந்தச் சந்தடி கேட்டு, விஜயாவின் தந்தைதான் வந்துவிட்டாரோ என்று ரங்கராஜன் சிறிது பரபரப்படைந்தது அவன் முகத்திலும் பிரதிபலித்தது.

''கலா! கார் வந்து விட்டது'' என்றாள் அந்த அம்மாள்.

அவள் எழுந்து, ''கல்லூரிக்கு நேரமாயிட்டது'' என்றாள்.

''போய்ட்டு வாருங்க'' என்று விடை கொடுத்தான் ரங்கராஜன்.

உள்ளே போய்ப் புத்தகங்களை எடுத்துக்கொண்டு காரைப் பார்த்து வேகமாகப் போகும்போதே, ரங்கராஜனை நோக்கிப் புன்னகையும் நாணமுமாக ஒரு கும்பிடு போட்டுவிட்டுக் கலா வெளியே ஓடினாள்.

''இருங்க இதோ வந்துவிட்டேன்'' என்று சொல்லிக் கொண்டே அவனுக்குக் காப்பியோ வேறு ஏதேனும் பானமோ கொண்டு வரலாம் என்று தாயாரும் உள்ளே போய்விட்டாள்.

''உங்க அப்பாவை நான் இன்னும் பார்க்கல்லே'' என்றான் ரங்கராஜன்.

''கார் வந்து நின்றதும் அப்பாதான் வந்துவிட்டாரோன்னு பயந்திட்டீங்க! இல்லையா?'' என்று அவள் கேட்டாள்.

ரங்கராஜன் சுதாரித்துக் கொண்டு, '' 'ஆமா'ன்னு ஒப்புக் கொள்றதும் அசட்டுத்தனமாக இருக்கும்; 'இல்லே'ன்னு மறுக்கிறதும் அசட்டுத்தனமா இருக்கும். நான் என்ன பதில் சொல்றது?'' என்றான்.

அவன் பதிலைக் கேட்டு அவளுக்கு மட்டற்ற உற்சாகமே ஏற்பட்டது.

''இப்பவே சொல்லிப்பிடுறேன். எங்க அப்பா சரியாப் பன்னிரண்டரை மணிக்கு வீட்டுக்கு வருவார். இப்ப விருந்தே மனசைத் தயார் பண்ணிக் கோங்க. எதிர்பாராத கலவரத்துக்கு இடம் கொடுக்க வேண்டாம்'' என்றாள் விஜயா.

''அப்படின்னு பன்னிரண்டரை மணி வரைக்கும் நான் இங்கேயே இருக்கணுமா? — கலவரப்படறதுக்கு இன்னும் மூணு மணி நேரம் இருக்கே!''

''உங்களுக்குக் கஷ்டமாவா இருக்கு, இங்கே உட்கார்ந்திருக்கிறது?''

அவன் பதில் ஒன்றும் சொல்லாமல் இருந்து விட்டு, ''எனக்கு ஒண்ணுமே சொல்லத் தோணல்லே'' என்றான்.

''பாவம்! மூச்சுத் திணறினாப் போலே கஷ்டப்படறீங்க. இது அனுவசியம். தயவு செய்து நீங்க மத்தியானம் வரைக்கும் இங்கேயே இருங்க. எங்க அப்பாவை ஒரு தடவை சந்திச்சிட்டீங்கன்னு போதும். அப்புறம் திணறலே இராது!''

''அவர் கையோடே எனக்கு 'ஆக்ஸிஜன்' கொண்டு வர்றாரா, என்ன?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

விஜயா சிரித்தாள்.

''அப்பாவைப் பத்தி நீங்க சொல்றதுக்கு என்ன அர்த்தம்னு எனக்குப் புரியல்லே. அவரைப் பார்த்தால் நான் நிறைய வேண்டியிராதுன்னு ஏன் சொல்றீங்க?''

''நீங்களே தெரிஞ்சுக்கப் போறீங்க. நான் சொல்வானேன்? ஒரு தடவை அவரோட பேசி அவரைப் புரிஞ்சுக்கிட்டீங்கன்னு, அப்புறம் நீங்க என்னை மறந்தாலும் மறப்பீங்க; அவரை உங்களாலே மறக்கவே முடியாது.''

''ரெண்டு பேரையுமே நான் மறக்க மாட்டேன்!'' என்றான் ரங்கராஜன்.

விஜயாவின் தாயார் பிஸ்கட்டும் ஹார்லிக்ஸும் கொண்டு வந்து வைத்தாள்.

''அம்மா! அப்பாவை இவர் பார்த்ததே இல்லே. திடீர்னு அவரைச் சந்திக்கப் போறது இவருக்கு எப்படியோ இருக்கு. எப்படிப்பட்டவரோ, என்ன சமாசாரமோன்னு ரொம்ப யோசனை பண்ணறார்....''

அந்த அம்மாள் சொன்னாள்: ''பார்க்காட்டாலும் அப்பாவுக்குத் தெரியும். அவரே சொன்னார்...''

''என்ன சொன்னார்?'' என்று கேட்டாள் விஜயா.

அந்த அம்மாள் அவளுக்குப் பதில் சொல்லாமல், ரங்கராஜனை நோக்கிப் பேசினாள்: ''உங்க வீடு பழக்கமானப்புறம் விஜயா ரொம்பக் கலகலப்பா இருக்கிறாள். எப்பவும் வாயை மூடிக்கிட்டு ஒரு மூலையில் உட்கார்ந்து எதையாவது படிச்சுக்கிட்டிருப்பாளே தவிர, ஒருத்தரோட பேசறதுமில்லே; ஒருத்தர் வீட்டுக்குப் போறதுமில்லே. இந்தச் சுபாவம் அடியோடு மாறி, குதூகலமா இருக்கிறதைப் பார்த்து அவருக்கு ஒரே சந்தோஷம். இதுக்காக உங்க வீட்டுக்கு நன்றி சொல்லணும்னே ஒரு நாள் சொன்னார்.''

தாயார் பேசும்போது விஜயா தலை குனிந்து கொண்டிருந்தாள். ரங்கராஜன் மட்டும் மகிழ்ச்சி ததும்ப அவளுடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு அமர்ந்திருந்தான்.

''அம்மா! இதைக் கேட்டால், என்னை விட எங்கம்மா ரொம்ப சந்தோஷப்படுவாள். எங்கோ பிறந்து, எப்படியோ மதுரை அரசடி விநாயகர் கோவில் தெருவிலே வந்து இப்படி நமக்குள்ளே ஒரு பிரியம் ஏற்பட்டிருக்கிறதைப் பார்த்தால், இது ஏதோ ஒரு ஜன்மாந்திரத் தொடர்புமாதிரி இருக்கு. தெய்வாதீனமாகச் சந்திச்ச மாதிரி சந்திச்சிருக்கிறோம்...'' என்று ரங்கராஜன் பரவசத்தோடு பேசினான்.

''அப்படித்தான் சொல்லணும்'' என்றாள் அந்த அம்மாள். **(தொடரும்)**

## கூட்டுறவு அப்பளம்!

பத்து ஆண்டுகளுக்குமுன், ஸ்ரீ வினோபா பாவேயின் ஆசியுடன் பம்பாயில் ஒரு கட்டடத்தில் குடியிருக்கும் பல பெண்மணிகள் சேர்ந்து தங்கள் ஓய்வுநேரத்தை வீணாக்காமல் தங்கள் சுயதேவைக்காக அப்பளம் செய்யத் தொடங்கினார்கள். ஏழு அங்கத்தினர்களுடனும் பத்து ரூபாய் முதலீட்டுடனும் ஆரம்பிக்கப்பட்டது இந்தச் சங்கம். அப்போது நிறையப் பெண்களைச் சேரும்படி செய்வதற்காக, புதிய அங்கத்தினர்களுக்கு ஐந்து ரூபாய் வெகுமதியும் கொடுத்தது. இன்று இந்தச் சங்கம் கூட்டுறவு முறையில் அப்பளம் செய்து விற்று வருகிறது. உள் நாட்டிலும், வெளி நாட்டிலும் அமோக ஆதரவைப் பெற்று, ஆண்டு ஒன்றுக்கு 6,000 ரூபாயாக இருந்த வியாபாரத்தை இரண்டு லட்சமாக உயர்த்திக் கொண்டிருக்கிறது. மஹிலா கிருஹ உத்யோக் (குடும்பப் பெண்களின் தொழில்) என்ற பெயரில் நடக்கும் இந்த நிறுவனத்தில் தற்சமயம் ஆயிரம் அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். லிஜ்ஜத் பப்பட் என்ற பெயரில் அப்பளங்கள் மிகப் பிரபலமாகி யிருக்கின்றன.



வேலைக்காரர்கள் உளுந்தை மாவாக அரைத்து, மாவை அப்பளமிடப் பக்குவமாகப் பிசைந்து வைக்கிறார்கள். தினம் எல்லாத் திக்குகளிலிருந்தும் அங்கத்தினர்கள் சங்கத்துக்கு வந்து தயாரான மாவு உருண்டைகளை வாங்கிப் போய், தங்கள் ஓய்வு நேரத்தில் அப்பளம் செய்து கொண்டு வந்து கொடுக்கிறார்கள். நாள் ஒன்றுக்கு ஐம்பதாயிரத்துக்கு மேல் அப்பளங்கள் தயாராகின்றன. வருடந்தோறும் வரும் லாபத்தில் எல்லா அங்கத்தினருக்கும் தங்க நகைகள் பரிசாகக் கிடைக்கின்றன. அன்றாடம் அப்பளம் இடுவதற்கான ரொக்க வெகுமதியும் உண்டு. இந்தச் சங்கத்துக்கு இன்று கிளைகள் பம்பாயில் வடாலாவிலும், குஜராத்தில் வாலோட் என்னும் இடத்திலும், பூனாவிலும் தொடங்கப் பெற்று வெற்றிகரமாக நடக்கின்றன. இப்போது இந்தச் சங்கம் இரண்டு கார்கள், சில சைக்கிள்கள், ஆபீஸ் உபகரணங்கள் முதலியன வைத்திருக்கிறது. விரைவிலேயே தங்கள் சௌகரியத்துக்காகத் தனி கட்டடமும், மின்சார மாவரைக்கும் இயந்திரமும் பெற முயன்று வருகிறது.

ஆதாரம்: பெமினா - தமிழில்: சரோஜா




என் காதிலே பற்றிய தீ உடலெங்கும் பற்றிப் பிடித்துத் தகித்துக் கொண்டிருப்பதைக்கூட நான் உண்மையில்லையென்று மறுத்துவிடலாம்! ஆனால் என் எதிரே நிற்பவள் — என் நெஞ்சிலே அந்தச் செய்தியைப் பொறியாகத் தூவியவள் என்னைக் கையோடு அழைத்துப் போகக் காத்து நிற்கிறாளே... அதன் பின்னரும் கூட நான் கேள்விப்பட்ட அந்தத் துயரச் செய்தியை இல்லையென மறுக்க முடியுமா? மறுத்து அவள் பின் செல்லாதிருக்கத் தோன்றுமா?

ஆபீசுக்குப் புறப்பட்ட நிலையிலே, வழக்கம்போல, சகுந்தலாவின் வரவுக்காகக் காத்து நின்றபோதுதான், அவள் வீட்டு வேலைக்காரி பாக்கியம் வந்தாள்.

என் உயிருக்குயிரான தோழி சகுந்தலாவின் கணவர், வெளி நாடு சென்றிருந்தவர், இறந்து விட்டதாகத் தந்தி வந்துள்ளதைச் சொல்லி விட்டு நான் வருவதற்காக நின்றாள்.

அம்மாவிடம் ஏதாவது சொல்ல வேண்டுமென்று தோன்றியதோ — சொன்னேனோ இல்லையோ — செய்தி கேட்ட சில நிமிடங்களில் நான் தெருவில் இறங்கி நடந்தேன்.

நான் நடந்தேன்; என் மனமோ சகுந்தலாவை நோக்கி ஓடியது.

அன்றாட வாழ்க்கையிலே நாம் சந்திக்கிற சாதாரண சராசரிப் பெண்ணல்ல சகுந்தலா. அன்புக்கு இலக்கணமாய் அமைந்தவள்.

மருத்துவம் படித்த கணவன் மேலும் பல நுட்பங்களை ஆராயும் பொருட்டு வெளிநாடு போக விரும்பியபோது, அவனிடம் சற்றும் சிணுங்காது, தன்னைத் தனியே விட்டுச் செல்லத் துணிந்ததற்காகச் சிடுசிடுக்காது வாழ்த்தி வழியனுப்பி வைத்தவள்:

கணவனது லட்சிய வெற்றியே தனது வாழ்வின் ஆதாரம் என நினைத்த பெருந்தன்மை அவனது பிரயாணத்துக்கு உற்சாகம் கொடுத்துத் தூண்டுகோலாகவும் இருந்திருக்கிறது.

தான் வாடினாலும்—அவனது பிரிவை நினைத்து வருந்தினால், அதன் பிரதிபலிப்பாய் அவன் மனத்துள்ளே கிளைக்கின்ற சலனங்கள் அவனது திறமைக்குத் திரையிட்டுவிடக் கூடாதென்ற சங்கல்பத்தில், மெல்லிய தன் இதயத்தை இரும்புக் கவசமாக மாற்றத் தெரிந்தவள்:

அன்பு மனத்தால் கோபுரம் எழுப்பி, அதனுள் வாழும் தெய்வீக ஆதரவுடன் வாழ்க்கைப் பாதையில் அமைதியாக நடந்து கொண்டிருந்தவள், இந்தத் திடீர் அதிர்ச்சியை எப்படித் தாங்கப் போகிறாள்? எதிர்பாராத விபத்துக்குள் சிக்கித் துவளும் என் இன்னுயிர்த் தோழிக்கு என்ன முறையில் ஆறுதல் சொல்லுவதெனத் தெரியாது திகைத்து நின்றேன், அவள் முன்னால்.

என்னைக் கண்டதும் ஓடி வந்து கட்டிக் கொண்டு அழுவதற்கு அவள் ஒன்றும் சாதாரணப் பெண்ணல்ல; அப்படி அழுதால்தான் அவள் சராசரிப் பெண்ணாகி விடுவாளே...!

''என்னால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லையேடி'' — உள்ளத்திலே கொட்டும் குருதியைக் கோடிட்டுக் காட்டியபோது நிலைகுலைந்து நின்றேன்.

# நன்மை பயக்குமெனில்...

தனக்கு அவலத்தைக் கொண்டு வந்துள்ள தந்தியை என்னிடம் நீட்டி, ''இது பொய்யாக இருக்கக் கூடாதா?'' என்று கேவினாள்.

'மாரடைப்பினால் இறந்து விட்டதாக வந்திருந்த எழுத்தை — தந்தியிலே கண்டுள்ள சொற்களைப் பொய் என்று மறுத்து விடலாம். ஆனாலும் நடந்துவிட்ட செயலை மறுக்க முடியுமா?

தகுந்த ஆள் வசதியோ பொருள் வசதியோ இல்லாத காரணத்தால் கடைசிப் பார்வைக்குக்கூடப் போக முடியாத நிலையில் புழுங்கித் தவித்தாள்.

முடியாத விதியை ஒப்புக் கொண்டு என் தோழி விதவையானாள் — மற்றவர்களால் ஆக்கப்பட்டாள்.

'அவர் இறந்துவிட்டதாகக் கூறுகின்ற துன்பத்தைவிட, அந்தத் துன்பத்துக்காக மற்றவர்கள் அவள் மீது கொட்டும் அனுதாபத்தைத் தாங்க மாட்டாமல் துடித்தாள்.

''தயவு செய்து என்னைப் பச்சாதாபத்துக்கு இரையாக்கி, பரிதாபத்துக்குரியவளாக்கி விடாதே'' என்று மன்றாடிய தன்

பேரில் அவளுக்குத் துணையாக ஓரிரு தினங்கள் அவளுடனேயே தங்கியிருக்க முடிவு செய்தேன்.

ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்தாலும், அவளுக்கான அன்பு வாழ்ந்து கொண்டிருக்கிறது — தன்னை வாழ்த்திக் கொண்டிருக்கிறது என்னும் தெம்பிலே, உயிர்ப்பாய் வளர்ந்தவள், இன்று அந்த நினைவின் அழிவிலே, அவளும் அழிந்து விடுவாளோ என்று அஞ்சும் நிலையில் அழுந்திப் போய் விட்டாள்.



அடுத்த ஆண்டு - விடை :

'சாதாரண' ஆண்டுதான்! வரும் தமிழ்ப் புத்தாண்டின் பெயரே அது தான்!

- சுதாகரன்

இரண்டு நாட்கள்...

இரண்டாயிர யுகப் போராட்டத்துடன் எப்படியோ நகர்ந்தது.

மூன்றுவது நாள் — காலைப் பொழுது....

சகுந்தலாவின் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. கடிதம் அவளது கணவனின் கையெழுத்து! வாங்கிப் படித்தவள் நெஞ்சிலே குபீரெனப் பாய்ந்தது துக்கம். கடிதத்தை என்னிடம் நீட்டி, ''தயவுசெய்து இதை என் பார்வையினின்று மறைத்துவிடு... இந்த வேதனையை என்னுல் தாள முடியாது தவிக்கிறேன்....'' எனத் துடித்தாள்.

கடிதத்துக்குத் தந்தியளவு வேகம் கிடையாதல்லவா? அதனுல்தான் மரணத்துக்கு முன்னர் எழுதிய கடிதம் இன்று அவளைத் தேடி வந்து வதைக்கிறது.

சாவு தன் அருகே இருப்பது தெரியாமல், என்னென்ன ஆசைக் கனவுகளை யெல்லாம் கொட்டிக் குவித்திருப்பானே — இல்லாது மறைந்துவிட்ட ஒருவன் இருக்கப் போவதாக நினைத்து எழுதிய எண்ணக் குவியல்களைப் படித்து ரசிக்கும் நெஞ்சுரம் இல்லாத காரணத்தினுல் கடிதத்தைக் கண்ணுல் பார்க்கவும் மறுத்து விட்டாள்.

''கடிதம் உனக்கு வந்தது; உன் கணவர் உனக்காகவே எழுதியது. கடிதத்தில் என்ன தான் எழுதியிருக்கிறுர் என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டாமா?''

''இந்தக் கடிதத்தைப் படித்துத்தானு அவரது எண்ணங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்? என் உயிர் மூச்சு ஒவ்வொன்றும் அவர் இதயத்தைப் பற்றிக் கதை கதையாய்க் கூறுமே. எனக்கு இந்தக் கடிதமே தேவையில்லை. தயவுசெய்து குருதி கொப்புளிக்கும் இதயத்தை மேலும் குத்திக் கிளறுதே...'' எனக் குமுறி அழுதபோது மேலும் அவளை வற்புறுத்த விரும்பவில்லை.

''அந்தக் கடிதத்தை உருத் தெரியாமல் கிழித்தெறிந்து விடு. உனக்கு ஆட்சேபமில்லையானுல் நீயே படித்துப் பார்த்துக் கொள்... என்னுள் அமுங்கி வரும் அவர் நினைவுகளை எந்தக் காரணத்தைக் கொண்டும் மேலெழுப்ப விழையாதே... என்னுள் அந்த நினைவுகள் ஒங்குமானுல் நான் அந்த நினைவுக்குள் ஆழ்ந்து போவேன். அழுந்திப் போவேன்... தயவு செய்து என்னை வற்புறுத்தாதே'' என்று இறைஞ்சினுள்.

அவள் மனப் போக்குப்படியே விட்டுவிட விரும்பிக் கடிதத்தை அப்புறப்படுத்தி விட்டேன்.

கடிதத்தை மட்டுமல்ல; அவனது நினைவுகளைச் சொல்லும் ஒவ்வொரு பொருளையுமே தன் பார்வையில் படாதவாறு அகற்றிக் கொண்டிருந்தாள்.

பாக்கியத்தின் துணையோடு அவளை வீட்டிலே விட்டு விட்டு நான் என் வீட்டுக்கு வந்தேன். இரண்டு நாட்களாகவே என்னைப் பிரிந்திருக்க நேர்ந்த தவிப்பை அம்மா சொல்லிக் கொண்டிருந்தாள்.

சகுந்தலாவின் கணவர் எழுதிய கடிதம் என் நினைவிலே உறுத்திக் கொண்டிருந்தது. சகுந்தலா கூறியது போலவே கடிதத்தைக் கிழித்தெறிந்து விடலாமா என்றுதான் எண்ணினேன். ஆனுல் அதிலே ஏதாவது முக்கியமான விஷயங்கள் இருந்து படித்துப் பார்க்காமலே புறக்கணிக்கப்பட்டுவிட்டால்?

துயரத் தீயில் கருகிக் கொண்டிருந்த வெம்மையில் இன்று கடிதத்தை வேண்டாமென எறிந்து விட்டாலும் என்ருவது ஒரு நாள் என்னதான் எழுதியிருந்தாரோ என்ற நினைவின் உறுத்தலோடு நீயாவது படித்துப் பார்த்திருக்கக் கூடாதா என்று கேட்டால்?

ஆயிரம் குழப்பங்களோடு கடிதத்தைப் பிரித்தேன்; படித்தேன்.

கடிதமா அது — என் நெஞ்சன் பற்றும் நெருப்பாகப் படர்ந்து கொண்டிருக்கிறது.

தமிழ் நாட்டிலிருந்து கல்வியைக் கற்கப் போனவன், அங்கு தன்னேடு படிக்கும் கனகா என்பவளோடு காதல் படித்துக் கொண்டிருக்கும் கதையை அல்லவா காவியமாக வரைந்து அனுப்பி யிருக்கிறுர்? அவனுக்காகவே அவன் நினைவாலேயே வாழ்ந்து கொண்டிருக்கும் அன்பு மனைவிக்கு வரையும் ஆசை மடல் — தனக்காகவே வாழ்ந்து கொண்டிருக்கும் அந்த ஜீவனிடமே தன் புது வாழ்வுக்கு ஆசியும் அனுமதியும் கேட்டு வந்துள்ள துன்பத்தைச் சகுந்தலா அறிய நேர்ந்தால்... வேண்டாம்... இறந்து போனவனின் ஆசைகள் அற்பமானதாக இருந்தாலும், சகுந்தலாவைப் பொறுத்த வரையில் உயர்ந்தவனுகவே உத்தமனுகவே வாழ்ந்து கொண்டிருக்கட்டும் என்ற எண்ணம் என் மனத்தை முழுமையாய் மூடியது.

சகுந்தலா சொன்னது போல் கிழித்தெறிந்திருந்தால் இன்று இத்தகைய வேதனையை விழுங்கும் துர்ப்பாக்கியம் எனக்கு நேர்ந்திருக்காது. இனி எந்த முகத்தோடு சகுந்தலாவின் முன் போய் நிற்பேன்?

இரண்டு நாட்களாக நான் சகுந்தலாவின் வீட்டுப் பக்கமே போகவில்லை.

பாக்கியம் என்னைத் தேடி வந்துவிட்டாள்.

''அம்மா கையோடு அழைத்து வரச் சொன்ருங்க'' என்று சொன்னவள் நான் வராவிட்டால் அங்கிருந்து அசையப் போவதில்லை என்பது போல் உட்கார்ந்து விட்டாள்.

என்னுல் போகவும் முடியவில்லை; போகாதிருக்கவும் முடியவில்லை.

போனேன். என்னுல் கலகலப்பாகப் பேச முடியவில்லை. எனது தயக்கத்தை அவள் வேறு விதத்தில் அர்த்தம் செய்து கொண்டு விட்டாள்.

''முடிந்து போன விதிக்காக வருந்திப் பயனென்ன? என் தலைவிதி ஒற்றைப் பனைமரமாக வாழ வேண்டுமென்று விதித்து விட்டான். அதனுல்தான் உயிருக்குயிரான அவரை என்னிடமிருந்து பறித்துக் கொண்டான்..'' என்று எனக்கு ஆறுதல் சொன்னுள்.

அவள் வார்த்தையிலே மனத்தின் தெளிவு பிரதிபலித்தது. பேசிக் கொண்டிருந்தவள்,


"என்னப்பா, வயிற்று வலியா? உனது தாயாரை பயோ-ஸால் கொடுக்கச் சொல். அது குழந்தைகளை ஆரோக் கியமாகவும், சந்தோஷமாக வும் இருக்கச் செய்கிறது"

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது!

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"பல் கோய்களால் நான் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன்.. உங்களுடைய போர்ஹான்ஸை உபயோகித்துப் பார்த்தேன்.......இப்போது எனக்கு அந்த நோய்களின் அவதியில்லை. அநேகமாக 20 முதல் 25 நபர்கள் போர்ஹான்ஸ் உபயோகிக்கத்தொடங்கி விட்டனர். என் குடும்பத்தில் போர்ஹான்ஸ் தனி இடம் பெற்று விட்டது."

—உதயசங்கர் திவாரி, பாட்னா.

"விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த பத்து வருடங்களாக உபயோகித்து வருகிறேன். அது எனது ஈறுக் கோளாறுகளை யெல்லாம் அகற்றி விட்டது. இப்போது என் குடும்பத்தினர் யாவருமே போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பல் துலக்குகிறார்கள்."

—எஸ். எம். லால், புது டில்லி.

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும் காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்...உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம்.

தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 15 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள் : மானேர்ஸ் டென்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

பெயர் ____________ வயது ________

விலாசம் ______________________

மொழி ________________________

K.6

**போர்ஹான்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

4SF-182 TM.

## உவகை தரும் உவமை

வெள்ளத்தை அணை கட்டித் தேக்கு வதுதான் அருமையும், பெருமையும், பெரு நன்மையுமாகும்! தேக்கிய வெள்ளத்தைத் திறந்து விடுவதோ மிகவும் சிறுமையும், சேதமும் ஆகும்!

அது போலப் பொங்கி வரும் பொல்லாக் கோபத்தை அடக்கினல் பெருமையையும் பெரு நன்மையையும் தரும்! கோபத்தை அடக்க முடியாமல் போனுல் சிறுமையையும், தீமையையுமே தரும்!

**- சிவப்பிரகாச சுவாமிகள் - நன்னெறி**



எழுந்து போய் ஒரு கடிதத்தை எடுத்து வந்தாள்.

அதுவும் அவள் கணவனிடமிருந்து வந்ததுதான். பிரிக்கப்படாமல் அன்றுபோலவே இன்றும் என்னிடம் தந்தாள்.

''முதல் கடிதத்தை என்ன செய்தாயோ, அதைப் போலவே இதையும்...'' என்றவள் என்னிடம் நீட்டினுள்.

விஷப் பாம்பைத் தீண்டும் வேதனையுடன் கடிதத்தைப் பெற்றுக் கொண்டேன்.

வீட்டுக்கு வந்ததும் அவசரம் அவசரமாகப் பிரித்துப் பார்த்தேன்.

முதல் கடிதம் எழுதின மறு தினமே இந்தக் கடிதமும் எழுதப்பட்டிருந்தது.

இந்தக் கடிதத்திலும் கிட்டத் தட்ட அதே வாசகம்தான்... தவறு தவறு...அதே பிதற்றல்கள்தான்....

ஐயோ! அதிலே உள்ள ஒவ்வொரு எழுத்தும் சுடு நெருப்பாய் என் நெஞ்சைச் சுட்டுப் பொசுக்கிக் கொண்டிருந்தன.

எந்த அன்பை உயர்வாக நினைத்துப் போற்றிக் கொண்டிருக்கிருளோ அந்த அன்பிலே களங்கம் — எவனைத் தெய்வமாக நினைத்து இதயத்திலே வைத்துப் பூசித்து வருகின்ருளோ அவனது இறப்புக்குப் பின்னரும் இறவாத அவனது களங்கம் உயிர்ப்பித்து வருகிறதே என்ற வேதனையில் மனம் புழுங்கினேன்.

நான் வந்த சில மணி நேரத்தில் பாக்கியம் என்னைத் தேடி வந்தாள். 'அம்மா அவசரமாக அழைத்து வர'ச் சொன்னதாகச் சொன்னுள்.

அவளது அவசரம் இன்னும் என்னென்ன நெருப்புத் துண்டங்களை விழுங்க வைக்குமோ என்ற அச்சத்துடன் சகுந்தலாவின் வீட்டுக்குப் போனேன்.

என்னைக் கண்டதும் அவசரமாகக் கேட்டாள்:

''சாரதா! உன்னிடம் தந்த கடிதங்கள் இரண்டையும் என்ன செய்தாய்? படித்துப் பார்த்தாயா? என்ன எழுதியிருந்தது?'' என்று பரபரப்புடன் கேட்டாள்.

என் மனம் அதிர்ந்தது.

கடிதத்தின் வாசகத்தைச் சொன்னுல் என் தோழியின் மனம் மட்டும் அதிர்ந்து போகாது. அவளே உருத் தெரியாமல் இடிந்து போய்விடுவாள். அந்த நஷ்டத்தைத் தாங்க முடியாத பலவீனத்தால் சொன்னேன். ''கடிதத்தைக் கிழித்தெறிந்துவிட்டேன். நீதானே சொன்னுய்?'' என்று பழியை அவள் மீது சுமத்தினேன்.

''ஆம், ஆம். தவறு என்னுடையதுதான். அது போகட்டும். சற்று முன் எனக்கொரு போன் வந்தது'' என்றதும் திடுக்கிட்டேன். மேலே என்ன சொல்லப் போகிருளோ என்ற பதைப்பு என் நெஞ்சில் பிறந்தது.

''லண்டனில் என் கணவரோடு சேர்ந்து படித்துக் கொண்டிருந்த பெண்ணொருத்தி—பெயர் கனகதுர்க்காவாம் - சென்னைக்கு வந்திருக்கிருள். அவளிடம் என்னைப் பார்த்து வரச் சொல்லி அனுப்பி யிருந்தாராம் என் கணவர். அவள் புறப்பட்டு வரும்போது அவர் உயிரோடுதான் இருந்திருக்க வேண்டும் அவரைப் பற்றி அத்தனை உயர்வாகப் பேசிய அந்தப் பெண்ணிடம், அவர் இறந்துவிட்ட அதிர்ச்சியைச் சொல்லி வேதனைப்படுத்த வேண்டாம் என்ற எண்ணத்தில் என் துயரங்களை என்னுள்ளேயே அடக்கிக் கொண்டு அவர் இறந்துபோனதைப் பற்றி அந்தப் பெண்ணுக்குச் சொல்லாமலே இருந்துவிட்டேன். இன்னும் சிறிது நேரத்தில் அவள் என்னைச் சந்திக்கப் போகிருள். அந்த நேரத்தில் நீ என் பக்கத்தில் இருந்தால் என் பல வீனங்கள் சற்று மறையுமே என்றுதான் உன்னைக் கூப்பிட்டு அனுப்பினேன்'' என்ற போது நான் ஒரு கணம் திகைத்தேன். பின்னர் சமாளித்துக் கொண்டு, ''அடடா! அம்மா அவசரமாக ஒருவரைப் பார்த்து வரும்படி சொல்லி யிருந்தாள். நீ கூப்பிட்டனுப்பிய அவசரத்தில் அம்மாவிடம் சொல்லிக்கொள்ளாமலே வந்து விட்டேன். சில மணி நேரத்தில் அம்மாவின் வேலைகளை முடித்துவிட்டு உன்னிடமே திரும்பி விடுகிறேன், ஆமாம்... உன்னோடு பேசியவள் எந்த ஹோட்டலில் தங்கி யிருக்கிருள்?'' என்று கேட்டு வைத்தேன்.

''ஏன், நீயே போய் அழைத்து வந்து விடுகிருயா? அதுவும் நல்லதுதான்'' என்றவள் விருந்தாளி தங்கியிருக்கும் ஹோட்டல் விவரங்களைச் சொன்னுள்.

''அம்மா குறிப்பிட்ட வேலை முடிந்து விட்டால் நீ கொடுத்துள்ள விலாசத்திலும் போய்ப் பார்த்து வருகிறேன். அதற்குள் அவள் வந்துவிட்டால்?... உன்னையே நீ சமாளித்துக் கொள்'' என்று கூறிவிட்டு அங் கிருந்து புறப்பட்டேன்.

சகுந்தலா கொடுத்த விலாசத்துக்கு என்ன வேகத்தில் பறந்தேனை, அத்தனை பெரிய

## "இது திருடியது!"

எனக்குக் காப்பி கொண்டு வருவதற்காக சர்வர் உள்ளே போனார். சிறிது நீர் பருகலாம் என்று எண்ணி மேசையிலிருந்த எவர்சில்வர் பாத்திரத்தை எடுக்கப்போனேன். அதில் பொறிக்கப்பெற்றிருந்த எழுத்துக்கள் என்னை வியப்புக்குள்ளாக்கின.




"P. C.-இது பாந்தியன் கேஃபில் திருடியது."

ஓட்டலின் பெயரையோ அல்லது பெயரின் முதல் எழுத்துக்களையோ மட்டும் பாத்திரத்தில் பொறித்தால் போதாதா என்று ஹோட்டல்காரரிடம் கேட்டதற்கு அவர் கூறினார்: "ஹோட்டலில் பாத்திரம் திருடுபவர்கள் அநேகமாக அதனை வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போவதில்லை. எங்கேயாவது விற்க முயலுவார்கள் அல்லது அடமானம் வைப்பார்கள். முதல் எழுத்துக்களை மட்டும் பாத்திரத்தில் பொறித்தால், அவை தன் பெயரைத்தான் குறிக்கின்றன என்று திருடியவன் தைரியமாகச் சொல்லிவிட முடியுமே? இன்ன இடத்தில் 'திருடியது' என்று பொறித்தால், 'திருடியது' என்ற வார்த்தை திருடி அடமானம் வைப்பவனைக் காட்டிக் கொடுத்துவிடுமல்லவா?" நியாயந்தானே?

— பாணன்

ஹோட்டலில் எப்படி அவள் இருக்கும் அறையைத் தேடிக் கண்டு பிடித்தேன் என்பது எனக்கே புரியாத செயல்.

ஆனால் என் வேகத்தையும் முந்திக்கொண்டு சகுந்தலாவின் துர்ப்பாக்கியம் செயல்பட்டிருந்தது.

நான் தேடிப் போன கனகாவின் அறை பூட்டிக் கிடந்தது. அந்த அறையில் தங்கியுள்ள பெண் சற்று முன்தான் வெளியே புறப்பட்டுப் போனதாக அங்குள்ளவர்கள் சொல்லக் கேட்டேன்.

என் மனத்தில் ஏமாற்றத்தை விடப் போராட்டம்தான் மேலோங்கிப் பாய்ந்தது.

புறப்பட்டுப் போன வேகத்திலும் பன்மடங்கு பாய்ச்சலுடன் சகுந்தலாவின் வீட்டை அடைந்தபோது, அங்கு ஹோட்டலில் பட்ட அடிக்கும் மேலான கனத்த அடி காத்திருந்தது.

சகுந்தலா அமைதியாக என்னை வரவேற்றாள். அவள் முகத்தில், பார்வையில் செயலில், சிந்தனையில் ஏதாவது மாற்றங்கள் சலனங்கள், சஞ்சலங்கள் பிரதிபலிக்கின்றனவா என்பதை வெகு நுணுக்கமாக ஆராய முற்பட்டேன்.

எனக்குத் தோல்வி. அந்தத் தோல்வியை மறைக்க முயன்ற நேரத்தில் சகுந்தலா சொன்னாள்: "என் கணவரின் சிநேகிதி வந்தாள்...." என்றபோது, நீச்சல் தெரியாத ஒருவனைத் தண்ணீருக்குள் தூக்கி எறியப்பட்டதைப் போல் உணர்ந்தேன்.

வந்தவள் என்ன என்ன புதிர்களைக் கொட்டிக் கவிழ்த்துச் சென்றிருப்பாளோ என்று குழம்பி நின்றேன்.

சகுந்தலாவே சொன்னாள்:

"என் கணவருக்கு எத்தனை அருமையான சிநேகிதி கிடைத்திருக்கிறாள்! அவரிடம் தனக்குள்ள நட்பைப் பற்றி எத்தகைய கண்ணியத்தோடு எடுத்துச் சொன்னாள் அந்தப் பெண்! இவள் இங்கு புறப்பட்ட அன்று விமானம் வரையில் வந்து வழியனுப்பிய மகிழ்ச்சியைப் பெருமை பொங்கச் சொன்னாள். இப்படிப்பட்ட பவித்திரமான நட்புக் கொண்ட அன்பர் இறந்து விட்ட அதிர்ச்சியை என் மூலம் தெரிவிக்க விரும்பாததால் என் துக்கத்தை என்னுள்ளேயே மறைத்துக் கொண்டு அவர் இன்னும் இருப்பதான உணர்வுடனேயே பேசி வழியனுப்பி வைத்தேன்."

'பேதைப் பெண்ணே!' என்று என் உள்ளம் ஓலமிட்டது. அதை மறைத்து, "வந்தவளை உணவருந்தச் சொன்னாயோ?" என்று கேட்டேன்.

"பாக்கியம் டிபன் கொடுத்தாள். நாடு கடந்து வந்தும் நண்பனின் மனைவியைச் சந்திக்கவேண்டும் என்று தோன்றிய அவளது அன்பைப் பாராட்டினேன். ஆனால் அவளோ.. ஆமாம். அந்தப் பெண் அதிக நேரம் இங்கு தங்கியிருக்க முடியாதவளைப் போன்று உடனேயே போய்விட்டாள். அதுதான் எனக்கும் புரியவில்லை. ஒருவேளை அவர் என்னுடன் இருந்திருந்தால் சில தினங்களாவது எங்களோடு தங்கிப் போயிருப்பாளல்லவா?"

கேள்வியா இது?

உண்மையை மறைத்துத் தவிக்கும் என் நெஞ்சில் கூர்வேலாகப் பாய்ச்சும் ஈட்டியல்லவா? கணவனையும் கணவனது நினைவுகளையும் கோபுரமாய் உயர்த்திக் கொண்டிருக்கும் அந்த அப்பாவியின் முன் 'உன் கணவரின் உள்ளம் குப்பை மேடு' என்னும் உண்மையை எப்படிப் பிரித்துக் காட்டுவேன்.

வேண்டாம். அந்த வேதனை என் நெஞ்சோடு மடியட்டும்.

டெலிபோன் மணி அலறியது.

சகுந்தலாவின் வீட்டில் எனக்குச் சகல உரிமைகளும் உண்டு. என்னையே போனை எடுத்துப் பேசச் சொன்னாள்.

எதிர்ப்புறமிருந்து எனக்கு அறிமுகமில்லாத ஒரு பெண்ணின் குரல் ஒலித்தது. ஒருவேளை அவள்தான் சகுந்தலாவைத் தேடி வந்தவளாக இருக்கக் கூடுமோ?...

சகுந்தலாவிடம் தெரிந்து கொள்ள முடியாத சில உண்மைகளை அவளிடமிருந்து தெரிந்து கொள்ளலாமென்ற எண்ணத்தில் எதிர்ப்புறத்திலிருந்து 'நீங்கள்தானே சகுந்தலா?' என்ற கேள்வி எழுந்தபோது 'எஸ்' என்று மட்டும் கூறி என் காதைத் தீட்டிக் கொண்டேன்.

கரகரக்கும் துயரக் குரல் போன் வழியே காதுகளில் மோதுகிறது.

"சகோதரி! தங்களைச் சந்தித்தது சில நிமிஷங்களே யானாலும் அந்தக் கணத்தில்

கலியாண கால விசேஷ விற்பனை!

# நல்லி சில்க்ஸ் பனாரஸ் ஹால்

82, ராயப்பேட்டை ஹை ரோட், லஸ், மயிலாப்பூர், சென்னை-4

(போன்: **76444**)

- பனாரஸ் கலியாண சேலைகள் எமது விசேஷ ரகம்
- ஜரிகை பார்டர் காடகிரி நூல் சேலைகள்
- ஜரிகை பார்டர் வெங்கடகிரி நூல் சேலைகள்
- கலாக்ஷேத்ரா & காஞ்சிபுரம் நூல் சேலைகள்
- ஹக்கோபா எம்ப்ராய்டரி சேலைகள் மற்றும் சோளிகள்

எல்லா சேலைகளுக்கும் ஏற்ற மாட்சிங் சோளிகள் கிடைக்கும்

---

குடும்பத் தலைவிகளுக்கு
மகிழ்ச்சியூட்டவல்ல
ஜெயராதா அளிக்கும்
மற்றும் ஓர்
புதிய மாடல்




சிறியது!
அடக்கமானது!
அழகானது!

½ லிட்டர் ஊறவைத்த
தான்யங்களை 30 நிமிடங்களில்
இட்லி தோசை வடை முதலிய-
வைகளுக்கு அரைக்க ஏற்றது.
மற்றும் பெரிய அளவு மிஷின்களும்
கிடைக்கும்.

# ஜெயராதா
## மாவரைக்கும் இயந்திரம்

ஜெயராதா இண்டஸ்ட்ரீஸ்
கணபதி நகர்,
மாயூரம்.
தஞ்சை மாவட்டம்
போன்: 416

யுகத்தில் தெளிவைக் கண்டேன். உங்கள் மீது உயிரையே வைத்திருந்த உங்கள் கணவர் என்னோடு பழக நேர்ந்தது. பாசம் கொண்டது எல்லாமே என்னுடைய துர்ப் பாக்கியத்தின் விளைவுதான் என்று எண்ணுகிறேன். எங்களுக்குள் அன்பு முதிர்ந்து ஒருவர் வாழ்க்கையில் மற்றவரைப் பிணைத்துக்கொள்ளும் முடிவுக்கு வந்துவிட்ட நிலையிலும்கூட விவரத்தை உங்களுக்குத் தெரியப்படுத்தி உங்கள் அனுமதி பெற்ற பிறகே அந்தச் செயலுக்குத் துணிவதாகக் கூறினார். கூறியபடியே என் கண்ணெதிரேயே கடிதத்தை எழுதி என்னிடம் கொடுத்து அதை அனுப்புகிற பொறுப்பையும் என்மீதே சுமத்தினார். அந்தச் சந்தர்ப்பத்தில் நான் தமிழ் நாடு வரவேண்டிய அவசியம் இருந்ததால் நேரிலேயே உங்களைச் சந்தித்து உங்கள் அனுமதி பெற்று வருவதாகவும் சொன்னேன். நான் புறப்படு முன்னதாக அதைப் பற்றி எழுதிய கடிதத்தையும் என்னைக் கொண்டே அனுப்பச் செய்தார். அந்தக் கடிதங்கள் இரண்டும் நிச்சயமாகத் தங்களுக்குக் கிடைத்திருக்கும். அதை நீங்கள் நிச்சயம் படித்திருப்பீர்கள். என்னைப் பற்றிய உண்மைகள் முழுதும் தங்களுக்குத் தெரிந்திருக்கும். தங்களைச் சந்திக்க வந்துள்ள நான், தங்கள் வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ள வந்த வைரி என்று தெரிந்தும், அதை ஒரு பொருட்டாக எண்ணாமல் என்னை வரவேற்ற தங்கள் பெருந்தன்மையின் முன், நான் கூசிக் குறுகினேன். இத்தகைய அருங்குணம் படைத்த உங்கள் வாழ்வில் குறுக்கிட்டு நான் சுகம் பெற விரும்பவில்லை. உங்கள் வாழ்விலின்றும், உங்கள் கணவரின் பார்வையிலின்றும் நிரந்தரமாக விலகிக் கொள்கிறேன்.'' என்று கூறிக் குலுங்கிக் குலுங்கி அழும் குரல் தொலை பேசி மூலமாய் வழியே என் செவியில் இறங்கி இதயத்துடன் பாய்ந்து இரத்தத்தோடு கலந்து கண்ணீராய் மாறி என் கண்களிலே கரைந்து வழிந்து கொண்டிருந்தது.

என் கண்ணீருக்குக் காரணம் புரியாமல் பரபரப்படைந்தாள் சகுந்தலா.

என் கையிலிருந்த ரிஸீவரைச் சகுந்தலா தன் கைக்கு மாற்ற வந்தபோது டக்கென போனை வைத்து விட்டேன்.

''பேசியது சற்று முன் வந்து போனுளே கனகதுர்க்கா... அவள்தான். நீ என்னிடம் சொல்லியது போலவே அந்தப் பெண்ணும் தன் ஆசைகளைச் சொன்னாள். அதாவது உன் கணவரும் இங்கு வந்துள்ள சமயமாக இன்னொரு முறை உங்களோடு தங்கியிருக்க வேண்டுமென்று விருப்பம் கொள்வதாகச் சொன்னபோது என்னையுமறியாமல் கண்களில் நீர் கரந்து விட்டது. அவ்வளவுதான்''

பொய்யே யானாலும் சொல்பவர்கள் சொன்னால் எத்தனை எளிதாக நம்பிவிடுகிறாள் பேதைப் பெண்...

என் மனம் சகுந்தலாவுக்காக இரக்கப் பட்டது.

சகுந்தலாவின் நெஞ்சிலே அவள் கணவர் தெய்வமாகவே உறைந்து வாழட்டும்; வந்த பெண் கனகாவின் மனத்தில் சகுந்தலா பண்பாட்டில் உயர்ந்தவளாகவே மதிக்கப் படட்டும்....

இரு பெண்களுக்கும் தெரியாத உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டிய உண்மைகள் — உண்மையே யானாலும் நிழலின் வடிவங்கள். அவை என் நெஞ்சோடு புதைந்து போகட்டும்.

சகுந்தலாவிடம் விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டேன்.



## " வெள்ளி ஓடம் "

வெள்ளிப் பூக்கள் விரியும் - விண்ணில்
    மறியும் நிலவைச் சொரியும்
கொள்ளை அழகைக் காட்டும் - எங்கும்
    கூடும் இருளை ஓட்டும்

இயற்கை அழகைக் கூட்டும் - தனித்த
    இருவர் நிலையை வாட்டும்
அயர்வை மாற்றி அமைக்கும்-அதன்பின்
    அற்புத நிலைகள் சமைக்கும்

குழவி மனத்தை மலர்த்தும் - குவிந்த
    குவளை முகையை அலர்த்தும்
அழகு தமிழில் பாடும் - கவிஞர்
    அகத்தை நாடி ஓடும்

நாணி முகிலில் மறையும் - நமது
    நடிப்புக் கண்டு விரையும்
காணத் தொலையும் துன்பம் - அந்தக்
    காட்சி நல்கும் இன்பம்.

- ம. இலட்சுமி நாராயணன்



# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

1947ல் பப்ளிக் லிமிடெட் கம்பெனியாக இணைக்கப்பட்டது

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: 13-H, கச்சேரி ரோடு, மாயவரம்

டைரெக்டர்கள் :

1. திரு S. R. G. ரெங்கநாதன் செட்டியார்
   (நல்லி சின்னசாமி செட்டி, சென்னை-17)
   பட்டு ஜவுளி உற்பத்தியாளர், கும்பகோணம்
2. C. M. அஷ்ரஃப் M. L. A.
   பாண்டிச்சேரி
3. திரு M. மாணிக்கம், B. A., B. L.
   அட்வகேட், மாயவரம்
4. திரு K. கேசர் சிங், வியாபாரம்
   மாயவரம்
5. திரு R. கல்யாணசுந்தரம், மானேஜிங் டைரெக்டர்
   மாயவரம்

அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் ... ரூ. 5,00,000

செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வ் நிதியும் ரூ. 1,75,217

சீட்டில் ஈடுபடுத்தப்பட்ட தொகை ரூ. 2¾ கோடிக்கு மேல்

அடியிற்கண்ட மாதாந்திர டெண்டர் (ஏல) சீட்டுக்கு அப்ளிகேஷன்கள் வரவேற்கப்படுகின்றன

| மாதச் சந்தா ரூ. | மாதங்கள் | பேர்கள் | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|---|
| 500 | 50 | 50 | 25,000 |
| 200 | 50 | 50 | 10,000 |
| 100 | 50 | 50 | 5,000 |

விண்ணப்பம் பெற கடைசி தேதி: 20-7-69

மாயவரம்
20-6-69

R. கல்யாணசுந்தரம்,
மானேஜிங் டைரெக்டர்



பேச்சுச் சுதந்திரம் ஒரு பலமான பாதுகாப்பாகும், ஏனெனில் முட்டாளுக்குக் கூட பேச்சுச் சுதந்திரம் கொடுத்து, பேச வைத்து, அவனே முட்டாளென்பதை உலகுக்கு விளம்பரப்படுத்தி விடலாமே!
- உட்ரோ வில்சன்

அனுப்பியவர்: "லலிதா மணாளன்"

வேண்டும்போது காற்றை ஊதி உபயோகித்துக் கொண்டு, வேண்டாதபோது காற்றை எடுத்துவிட்டு மடித்துப் பையில் எடுத்துச் செல்லும்



பிளாஸ்டிக் நாற்காலி மேஜைகள் இப்போது ஜெர்மனியில் தயாராகின்றன.

- "காக்கரர்" - 'பாபு'



## மலைப் பாம்பு

தென்னை, பனை மரங்களைப் போல் பெரிய காட்டுப் பாதையில் குறுக்கே மலைப் பாம்பு படுத்திருக்கும். அந்தச் சமயத்தில் காட்டுப் பிராணிகளோ அல்லது காடர்களோ அதைத் தாண்டிப் போகும்பொழுது அது உடனே தன்னுடைய வாலால் அப்படியே சுருட்டி வளைத்துப் பள்ளத்தைப் பார்த்து இழுத்துச் செல்லும். மலைப் பாம்பு தன் உடலின் மேல் ஏதாவது ஒரு பொருள் பட்டதும் உடனே அதைச் சுருட்டிப் பிடித்துத் தன் வாயால் எவ்வளவு சீக்கிரம் கௌவிக் கொள்ள முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கௌவப் பார்க்கும். காட்டு ரஸ்தாவில் மலைப் பாம்புகள் படுத்திருந்தால் காடர்கள் என்ன செய்வார்கள் தெரியுமா? அதன் உடலில் படும்படி ஏதாவது ஒரு பொருளைத் தூரத்திலிருந்து கொண்டே தூக்கிப் போடுவார்கள். உடம்பில் பட்டதும் அது சுருட்டிக் கொண்டு பக்கத்திலிருக்கும் பள்ளத்தில் விழுந்துவிடும். பிறகு பாதையைக் காடர்கள் கடந்து போவார்கள். காட்டில் அடிக்கடி வழிகாட்டியைக் கவனித்துக் கொண்டேதான் நான் நடந்து செல்லுவேன். ஏனென்றால் சில வழி காட்டிகளும் காடர்களும் காட்டில் திடீரென்று மோப்பம் பிடிப்பார்கள். அப்பொழுது உடனே ஏதாவது மிருகங்கள் வருகின்றனவென்று நான் ஜாக்கிரதையுடன் இருப்பேன். நானும் மோப்பம் பிடித்துச் செல்லுவேன். காடர்கள் சுமார் இரண்டு மைல் தூரத்துக்கு முன்பே மோப்பம் பிடித்தால், நான் சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்தில் இருக்கும் பிராணிகளையும் இரத்த வாடையையும் மோப்பம் பிடித்துச் சொல்லி விடுவேன்.

- பிலோ இருதயநாத்

## சென்னையில் பல்லவபுரம்

பல்லவபுரம் சென்னையில் எங்கே உள்ளது?

பல்லாவரம்தான் பல்லவபுரம் என்று தற்போது மாறியிருக்கிறது. சந்தேகம் இருப்பின் பல்லாவரம் போலீஸ் ஸ்டேஷன் சென்று காண்க.

- டி. எஸ்.சௌந்தரராஜன்




## "ஏ ஒன் உவமை!"



"இன்றைய உலக அரசியல் நிலைமை, மாடர்ன் ஆர்ட் போன்று அவ்வளவு 'தெளிவாக' இருக்கிறது!"

ஸ்டேட்ஸ்மன் - 'முத்து'




# பஜாஜ் மின்விசிறிகள்

எடுப்பான அமைப்-
புடைய பஜாஜ் மின்விசிறிகள்
லேசான ரீங்காரத்துடன் இயங்கி,
குளுகுளுவென்ற மென்மையான காற்று
உங்களைத் தழுவும்படி செய்கின்றன. இவை அதிக
பட்ச காற்றுவீச்சைத்தருவதற்கேற்ப டிஸைன் செய்யப்
பட்டவை—அதாவது, குறைந்த செலவில், அதிகமான சேவை
திறனைத்தருகின்றன. எல்லாம், வருடக்கணக்கான அனுபவம் மற்றும்
செய்முறை அறிவின் பயனாக விளைந்த இந்த ஒரு மின்விசிறி தரும்
பயன்களே.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
45-47, வீர்நரிமன் ரோடு, பம்பாய்-1
இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு

Member: FAIR TRADE PRACTICES ASSOCIATION

அண்ணலின் வாழ்விலே...

# யாருக்குப் பாதுகாப்பு?

காந்திஜி செருப்புக்கூட அணிந்துகொள்ளாமல் நவகாளி வட்டாரத்தில் கிராமம் கிராமமாகச் சென்று இந்து முஸ்லிம் ஒற்றுமைக்குப் பாடுபட்டுக் கொண்டிருந்த சமயத்தில் ஒரு நாள் வாட்டசாட்டமான ஒருவன் காந்திஜிக்கு வணக்கம் தெரிவித்தான். காந்திஜியுடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது, இரகசியப் போலீஸைச் சேர்ந்த தன்னையும் வேறு சிலரையும் காந்திஜிக்குப் பாதுகாப்புக்காக வங்காள முதல் அமைச்சர் திரு. ஷுராவர்த்தி அனுப்பி யிருப்பதாக அவன் தெரிவித்தான். காந்திஜி சிந்தனை வசப்பட்டார். அவன் சென்ற பிறகு, தமக்குப் போலீஸ் பாதுகாப்பு அவசியமில்லை என்றும், ஆண்டவனிடம் தன்னை ஒப்படைத்து அன்புப் பணியை ஏற்றுக்கொண்டிருப்பதால் இந்த முயற்சியில் கொலையுண்டு இறக்க நேர்ந்தாலும் அதை மகிழ்ச்சியுடன் வரவேற்கத் தயாராக இருப்பதாகவும், வங்க முதல் அமைச்சருக்கு காந்திஜி கடிதம் எழுதினார்.



கடிதத்தைப் படித்ததும் முதல் அமைச்சர் திகைப்படைந்தார். தம்முடைய காரியதரிசி திரு பி.என். சக்கரவர்த்தியை அழைத்து ஆலோசித்த பிறகு ஒரு கடிதம் எழுதி ஓர் அதிகாரி மூலம் காந்திஜிக்கு அனுப்பினார். கடிதத்தைப் படித்ததும், காந்திஜி, "பாதுகாப்புக்காக அனுப்பியுள்ள ரகசியப் போலீஸ்காரர்களைத் திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டாம்" என்று முதல் அமைச்சருக்குத் தந்தி மூலம் தெரிவித்தார்.

காந்திஜியின் மனமாற்றத்துக்குக் காரணம் என்ன? காந்திஜியின் பாதுகாப்புக்காக ரகசியப் போலீசை அனுப்பினாலும் அது சுயநலத்துடன் அனுப்பி யிருப்பதாகவும், காந்திஜிக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால் மக்கள் கொதித்தெழுந்து முதலமைச்சரைக் கொல்லத் துணிந்துவிடக் கூடும் என்றும், தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவே போலீஸை அனுப்பி யிருப்பதாகக் கருத வேண்டும் என்றும் பணிவுடன் திரு ஷுராவர்த்தி அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

## காந்தி சொன்ன கதை

லண்டனில் வெஸ்ட்மினிஸ்டர் பாலம் ரோட்டில் உள்ள விடுதியில் காந்திஜி தங்கியிருந்தார். தம்மைச் சந்திக்க வரும் பிரமுகர்களுக்கு, பழங்களும் தேநீரும் கொடுத்து காந்திஜி உபசரிப்பதுண்டு. விடுதியிலுள்ள ஆடம்பரமான முறைகளையும், வெள்ளித் தட்டில் தேநீர் கொண்டு வரும் ஏற்பாட்டையும் ஒதுக்கிவிட்டு, தம்முடைய அறையிலேயே மிகவும் எளிய முறையில் விருந்தினரை அவர் உபசரிப்பதைக் கண்டு விடுதிச் சிப்பந்திகள் வியப்படைந்தார்கள். ஆயினும் ஒழுங்கு முறைக்குக் கட்டுப்பட்டு, அவருடைய தேவைகளைக் கவனித்து அளித்தார்கள்.

ஒரு சமயம் காந்திஜியைச் சந்திப்பதற்காகத் திருவாட்டி போலக் அந்த விடுதிக்குச் சென்றாள். உரையாடிக் கொண்டிருக்கும் போது, தம்முடைய நண்பர்களில் சிலர், வருமானம் குறைந்து விட்டதால் வாழ்க்கை நடத்துவதற்குச் சிரமப்படுவதாகத் திருவாட்டி போலக் கூறினார்.

"ஏன் சிரமப்பட வேண்டும்? வருமானத்துக்கு ஏற்ற முறையில் செலவைக் குறைத்துக் கொண்டு எளிய வாழ்க்கை நடத்தினால் இன்பம் காண முடியாதா?" என்று காந்திஜி கேட்டார்.

"அவர்களிடம் ஆடம்பரச் செலவு கிடையாது. திடீரென வாழ்க்கை வசதிகளைச் சுருக்கிக் கொள்வது எளிதல்ல."

"வசதியாக வாழ்க்கை நடத்துவதற்காக வரவை மிஞ்சிச் செலவிடுவது யோக்கியப் பொறுப்பான செயல் அல்ல."

"எதிர்பாராமல் வருமானம் குறைந்து விட்டதால் ஏற்படும் சிக்கல் இது. ஓர் உதாரணம் கூறுகிறேன். என்னுடைய நண்பர் 'பி' வணிகர். இப்போது வியாபார மந்தம் ஏற்பட்டிருப்பதால் வருமானம் குறைந்து விட்டது. ஆனால் செலவைக் குறைக்க முடியவில்லை."

"அவர் இப்போது வசிக்கும் வீட்டை விட்டு விட்டுச் சிறிய வீட்டுக்கு மாறினால் வாடகைப் பணத்தில் மிச்சம் ஏற்படும். வேலைக்காரியை நிறுத்திவிட்டுத் திருவாட்டி 'பி' வீட்டு வேலைகளைக் கவனித்துக்கொண்டால் மேலும் கொஞ்சம் செலவு குறையும்."

"திருவாட்டி 'பி' ஆரோக்கியமில்லாதவள். அவளுக்கு வீட்டு வேலைகளைச் செய்து பழக்கம் இல்லை."

"மனம் வைத்தால் வீட்டு வேலைகளைக் குறைத்துக் கொள்ள வழியுண்டு. அவருடைய வீட்டில் தரை விரிப்புகளை,

பீங்கான் பாத்திரங்கள், அலமாரிகள் என ஏராளமான சாமான்கள் இருக்கின்றன. அவற்றைத் தூசி தட்டி வைத்துக் கொள்வதற்கு வேலையாள் தேவைப்படுகிறான். அவசியமான சாமான்களை மாத்திரம் வைத்துக் கொண்டு மற்றவற்றை விற்றுவிட்டால் வேலையும் குறையும், சிறிய வீட்டில் குடியேறவும் வசதியாக இருக்கும். அதனால் செலவு குறையும்.''

''திருவாட்டி 'பி' போன்றவர்கள் பழமையைப் பற்றுள்ளவர்கள். முன்னோர்கள் ஆண்ட சாமான்களைக் காப்பதில் தனிக் கருத்துடையவர்கள். அவற்றைப் பாதுகாப்பது தங்களுடைய கடமை என்று கருதுகிறவர்களிடம் உங்களுடைய யோசனையைக் கூறினால் மனமுடைந்து செத்து விடுவார்கள்.''

''இங்குதான் சிக்கல் இருக்கிறது. முன்னோர்களுடைய வாழ்க்கையை நினைத்து மகிழ முடியாதா? அவர்களுடைய பொருள்களைப் பாதுகாப்பது கடமை என்றும் அதில்தான் மகிழ்ச்சி என்றும் கருதுவது தவறு.''

''உங்களுடைய யோசனை அபாயகரமானது என்று கருதுகிறேன்.''

''இல்லை. எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் மகிழ்ச்சியுடன் வாழப் பழகிக் கொள்வது அவசியம். ஒரு கதை சொல்கிறேன். பற்றுதலும் பாசமும் இல்லாமல் கடமையில் கருத்துடன் வாழ்ந்து வந்த அரசரிடம் துறவு என்ற பெருமையில் இன்பம் காணும் ஒரு சந்நியாசி வந்தார். மாற்றுடையாகக் கட்டிக் கொள்வதற்கு வைத்திருந்த ஒரு கோவணம் தான் அவருடைய ஆஸ்தி. அவர் முற்றும் துறந்தவர்தானா என்பதைச் சோதிக்க விரும்பிய அரசன், தன்னுடைய யோக சக்தியால் சந்நியாசியின் கோவணம் உட்படத் தன்னுடைய அரண்மனையை எரித்து விட்டான். அதைக் கண்டு திடுக்கிட்ட சந்நியாசி சஞ்சலமடைந்தார். 'ஸ்வாமி, ஏன் வருந்துகிறீர்கள்?' என்று அரசன் முறுவலுடன் கேட்டதற்கு சந்நியாசி, 'அரசே, என்னுடைய மாற்றுடையும் எரிந்துவிட்டதே' என்று கவலையுடன் கேட்டார். அரசன், 'ஸ்வாமி மாற்றுடையை நீங்கள் இழந்து விட்டீர்கள் என்பது மெய்தான். வேறு துணி எளிதில் கிடைக்கலாம். ஆனால் நானோ விலை மதிப்பற்ற பொருள்களுடைய அரண்மனையையே இழந்துவிட்டேனே! என்னுடைய இழப்பை விட உங்களுடைய இழப்பைப் பெரிதாகக் கருதி வருந்துகிறீர்களே!' என்று கேட்டான். சந்நியாசி வெட்கித் தலை குனிந்தார்... தாமரை இலைத் தண்ணீர் போல் வாழ்க்கை நடத்தும் அரசனை வணங்கி விடை பெற்றுக்கொண்டார்.

'' பழம் பொருட்களைப் பாதுகாப்பது தவறு என்று நான் கூறவில்லை. அவசியம் ஏற்படும் போது அவற்றை உதறித் தள்ளி மன அமைதியுடன் வாழப் பழகிக் கொள்வதும் அவசியம்'' என்றார் காந்திஜி.

திருவாட்டி போலக், காந்திஜியின் உபதேசத்தை ஏற்றுக் கொண்டார்.

## நான் கைதிதான்!

ஏரவாடா சிறையிலிருந்தபோது காந்திஜி நோய்வாய்ப்பட்டதால் அவரை சாசூன் ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார்கள். ஒரு நாள் அவரைப் பார்ப்பதற்கு அனுமதி பெற்று ஆஸ்பத்திரிக்குக் காகா சாகேப் சென்றார். கதராடை அணிவதை விரதமாகக் கொண்ட காந்திஜி, அன்னியத் துணியால் தயாரிக்கப்பட்ட ஆஸ்பத்திரி உடையை அணிந்திருப்பதைக் கண்டு வியப்படைந்தார்.

அப்பொழுது காந்திஜி சொன்னார்: ''நான் ஒரு கைதி. சிறை ஒழுங்கு விதிகளைக் கடைப்பிடிப்பது போல் ஆஸ்பத்திரியிலிருந்தாலும் இங்குள்ள விதிமுறைகளைக் கடைப்பிடிப்பதே பொருத்தமாகும்.''

சில நாட்களுக்கெல்லாம் காந்திஜியை விடுதலைசெய்யச் சர்க்கார் தீர்மானித்தார்கள். கர்னல் மாடக், ஆஸ்பத்திரிக்கு வந்து ''உங்களை விடுதலை செய்யுமாறு உத்தரவு வந்திருக்கிறது. ஆயினும் இன்னும் சில நாட்கள் இங்கு தங்கிவிட்டுச் செல்வது நலம் என்பதை வைத்திய அதிகாரி என்ற முறையில் கூறுகிறேன்'' என்றார்.

அவருடைய ஆலோசனையைக் காந்திஜி ஏற்றுக் கொண்டார். அதே மூச்சில் அருகிலிருந்தவரிடம், ''இந்த உடைகளை அப்புறப்படுத்தி விட்டு என்னுடைய உடைகளைக் கொண்டுவாருங்கள். இனிமேல் கணநேரம் கூட இதைத் தரித்திருக்க முடியாது'' என்றார்.

கதர் ஆடையை அணிந்து கொண்ட பிறகுதான் மற்றவர்களுடன் சகஜமாய்ப் பேச அவரால் முடிந்தது.

## உண்மையா, பட்டினியா?

ஜவுளிக் கடையில் பணியாற்றிக் கொண்டிருந்த ஒருவருக்குப் பொய் பேசப் பிடிக்கவில்லை, பொய் பேசாமல் வியாபாரம் செய்யவும் முடியவில்லை. தொழிலை விடவும் முடியவில்லை. வேறு வேலை தேடிக் கொள்ளவும் வாய்ப்பில்லை. ''இந்த நிலைமையில் நான் என்ன செய்வது?'' என்று கேட்டு அவர், காந்திஜிக்குக் கடிதம் எழுதினார்.

காந்திஜி எழுதிய பதிலில் ஒரு பகுதி வருமாறு: எந்தச் சந்தர்ப்பத்திலும் சத்தியத்தைக் கடைப்பிடிப்பவனே சத்தியவான். வியாபாரம் செய்தாலும், தொழில் நடத்தினாலும் வேறு பணிகளைச் செய்தாலும், பொய் பேச வேண்டும் என்று அவசியம் இல்லை. பொய் பேச வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அந்தத் தொழிலை உதறிவிடலாம். அதனால் பட்டினி கிடக்க நேரிடும் என்றாலும் அதை மகிழ்ச்சியுடன் ஏற்கலாம்.

— கே. எஸ். ஜே.


எவ்வளவு கடினமான
வேலையாய் இருந்தாலும் சரி,
ஒரு கப் A-1 தேநீரைப்
பருகி புத்துணர்ச்சி
அடையுங்கள் —
அதிக நறுமணமும்
ருசியும் உள்ளது
உங்கள் பணத்தையும்
மீதப்படுத்துகிறது




Brooke Bond Tea
Brooke Bond
ப்ரூக் பாண்ட்
A-1 தேயிலைத்தூள்
அதிக கோப்பைகள் சிறந்த
தேநீர் தருவது

# அழகுக்காக....

ஸரோஜா ராமமூர்த்தி....

சில மாதங்களாகத் தன் கணவனிடம் ஏற்பட்டு வரும் மாறுதல்களை ருக்மிணி கவனித்து வந்தாள். வாசனைத் தைலம், பவுடர், ஸ்நோ என்று எதிலும் பிடிப்பில்லாதிருந்த சங்கர் அடிக்கடி அவைகளை வாங்கி வருவதும், நிலைக் கண்ணாடி முன்பு உட்கார்ந்து தன்னைச் சிங்காரித்துக் கொள்வதுமாக இருந்தான். அந்த அலங்காரம் அவனுக்கு மிகப் பொருத்தமாக இருந்த போதிலும் ருக்மிணிக்கு அது பிடிக்கவில்லை. அவனும் இளமையானவன்தான். முப்பத்தைந்து வயசு என்ன அப்படி ஒரு வயசா? அவனிடம் அதிகமான அழகில்லாவிட்டாலும் பழைய பாணியில் உடையணிந்து பதவிசாக இருந்தான்.

சற்றுக் குட்டையாக, தடித்த உடம்பு. கறுப்புதான். கோயில் தூண்களில் சில சமயம் குள்ளமான பெண் உருவங்களைப் பார்க்க நேரிட்டால் சட்டென்று ருக்குவின் நினைவு வரும்.

இதற்கு நேர்மாறான தோற்றம் உடையவன் சங்கர். நல்ல உயரம். சுருள் கிராப்பு. கூரிய நாசி. தீர்க்கமான கண்கள். இந்த அழகன் ருக்குவைப் பார்த்துப் பிடித்துத்தான் திருமணம் செய்துகொண்டான்.

ஐந்து குழந்தைகளுக்கு அன்னையாகிவிட்ட அவளிடம் இப்போதே அழகு கூடியிருந்தது. பெண் பார்த்து விட்டு வந்த அன்று அம்மாவும், அப்பாவும் அவனிடம் ஒரே குரலில், ''ஏண்டா! உனக்குப் பெண் பிடிச்சிருக்கா? அவர்கள் கேட்டால் என்ன சொல்றது?'' என்று கேட்டார்கள்.

''பிடிச்சிருக்கு. பண்ணிக்கிறேன்.''

''ஏதோ பெண்ணைப் பார்த்துச் சொல்'' என்று அம்மா அவன் முகத்துக்கு எதிரே நின்றபடி கேட்டாள்.

அவன் தன் முத்துப் பற்கள் தெரியும்படி நகைத்தான். இம்மாதிரி சிரிப்பு அந்தத் தாயின் மனத்தைக் கொள்ளை கொண்டுவிடும். நல்ல அழகான பிள்ளைக்கு இப்படி ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்ததைப் பற்றி அம்மா மனம் குமைந்தாள்.

''அண்ணாவுக்குப் பிடிச்சிருக்கா?'' என்று கேட்டுக்கொண்டே அபிதா, அவனுடைய தங்கை, உள்ளேயிருந்து வந்தாள். வந்தவள், 'ஹி... ஹி...' என்று சிரித்தபடி, ''அப்போ நேக்கும் ஆம்படையான் வந்துடுவான்'' என்று ஆர்ப்பரித்தாள். தாயும், மகனும் அந்தப் பெண்ணைத் திரும்பிப் பார்த்தார்கள். பெண்



உருவத்தில் ஓர் அசடைப் பெற்றுவிட்டு அதற்கு மணம் செய்யும் வயதும் வந்து விட்டால் பெற்றவர்களின் மனத்தில் அதை விடச் சுமை வேறு என்ன இருக்க முடியும்? இந்த அபிதா என்கிற அசட்டின் கழுத்தில் மூன்று முடிச்சுக்கள் போடப் போகிறவன் தான் சங்கரின் வரப்போகிற மனைவியின் தமையன். அவன் அசடு அல்ல. கால்களை இழந்தவன். இதிலே ஒரு பேரம் நடந்திருந்தது. அபிதாவை அவன் மணந்து கொண்டால், சங்கர் அவன் தங்கை ருக்குவை மணந்து கொள்ள வேண்டும் என்கிற நிபந்தனைக்குக் கட்டுப்பட்டே ஆகவேண்டியிருந்தது.

"ச்சீ... உள்ளே போடி, வாயை மூடிண்டு.... கர்மம்... கர்மம்...." என்று தலையில் இரண்டு போட்டுக் கொண்டார் பெண்ணைப் பெற்றவர்.

"எனக்கு ஆம்படையான் வர்றது பிடிக்கல்லே அப்பாவுக்கு" என்று அழ ஆரம்பித்தாள் அபிதா. அழுகை யென்றால் சாதாரணமான அழுகையா என்ன? மணிக்கணக்கில் தொடர்ந்து நாட்கணக்கில் நீண்டுகொண்டே போகும் அழுகை.

எங்கே அந்த அழுகையைத் தொடர்ந்து விடுவாளோ என்று பயந்து சங்கர் அவளைச் செல்லமாக, "அபி ! இங்கே வாம்மா !" என்று அழைத்தான். அவள் அருகில் வந்து நின்றதும் அவள் தலையை ஆதரவாக வருடிக் கொண்டே, "எனக்கு அவா பொண்ணைப் பிடிச்சிருக்கு. உனக்கு அவா பிள்ளையைப் பிடிச்சிருக்கோ ?" என்று கேட்டான்.

"ஓ! பிடிச்சிருக்கே அண்ணா! அவருக்குக் கால் இல்லேன்னா என்ன? எனக்கும்தான் சமர்த்து இல்லே — அப்போ இரண்டுக்கும் சரியாய்ப் போச்சு இல்லே?" என்றவாறு அவள் நாணிக் கொண்டே உள்ளே வேகமாக ஓடி விட்டாள்.

அசடோ எதுவோ ? அவள் அவன் உடன் பிறப்பு. அவள் முகத்தில் மலர்ச்சியைக் கண்டதும் அவன் உள்ளம் ருக்குவை அழகியாகவே ஏற்றுக் கொண்டது.

உற்றாரும், உறவினரும் சங்கரை ஒரு தியாகியாகவே மதித்தனர். 'தங்கைக்காக இந்தக் காலத்தில் — இந்தச் சினிமா யுகத்தில்— எவன் இப்படித் தியாகம் புரிவான் என்றெல்லாம் பேசினர்.

பன்னிரண்டு வருஷங்களுக்கப்புறம், அவனுடைய மூத்த மகள் பாவாடை கட்டிக் கொண்டிருந்தவள் தாவணி அணிய ஆரம்பித்த பிறகு சங்கரிடம் இலேசாகச் சில மாறுதல்கள் தோன்றியவுடன் ருக்குவை அவை வியப்பில் ஆழ்த்தின.

ஒரு நாள் அவன் அலுவலகத்திலிருந்து வரும் போது பை நிறைய அழகுச் சாதனங்களை வாங்கி வந்தான். கஸ்தூரி மஞ்சளும், பயற்றம் மாவும் பூசிக் கொண்டு ஆரோக்கியமாகத் திகழ்ந்து வந்த குடும்பத்தில் இப்படி நோட்டு நோட்டாகப் பவுடர் ஸ்னோவுக்குப் பணம் போகிறதென்றால் ருக்குவால் பேசாமல் இருக்க முடியவில்லை.

மறு நாள் காலையில் அவன் படுக்கையில் படுத்தபடியே காப்பிக்காகக் காத்திருந்தான். கமகமென்று ஆவி மணக்கும் காப்பியைக் கொண்டு வந்து மேஜையின் மீது வைத்து விட்டு நகர்ந்து நின்றாள் ருக்மிணி. காப்பி முன்னைப்போல் பொன்நிறத்தில் நுரை ததும்ப இல்லை. கொஞ்சம் தண்ணிக் காப்பிதான்.

"என்ன இது? காப்பியா ?"

"ஆமாம்....இப்படிச் செலவு பண்ணினால் தண்டத்துக்கு. வயிற்றுப்பாட்டைக் குறைச்சுத்தான் ஆகணும்."

"என்ன ஆமாம்? டம்ளரிலிருந்து வாய்க்கு இறங்காது முன்னேயெல்லாம். நிக்காத நாக்கை ஒரு சுழற்று சுழற்றும். நம் வீட்டுக் காப்பி ஸ்பெஷல்னு என் சிநேகிதாள்ளாம் சொல்லுவா."

"சொல்லுவா... சொல்லுவா... இப்போ ஒண்ணாந்தரக் காப்பிக் கொட்டை வெளிநாட்டுக்குப் போறது. ஒண்ணாந்தர டீயும் அங்கே தான் போறது. அப்புறமா ஒண்ணாந்தர மிளகு, ஏலம், முந்திரி எல்லாமே டாலர் சம்பாதிக்க வெளிநாட்டுக்கு ஓடறதுகள். நமக்கு எல்லாமே இரண்டாந்தரம்தான்—"

சங்கர் அவளை சுவாரசியமாகத் திரும்பிப் பார்த்தான். மூத்த மகள் தம்பூரில் சுருதி சேர்த்துக் கொண்டிருந்தாள். மற்றதுகள் படித்துக் கொண்டிருந்தன. பூஜையறையிலிருந்து ஊதுவத்தி மணத்தது. பிச்சிப் பூச்சரம் ராம பிரானின் படத்தில் தவழ்ந்து கொண்டிருந்தது. அதிலிருந்து ஒரு கிள்ளு எடுத்துக் கோடரி முடிச்சின் கீழ் ருக்கு மடித்து வைத்திருந்தாள். சங்கர் சிரித்தபடி மனைவியைப் பார்த்து, "இங்கே வாயேன் சொல்கிறேன். இப்படி முடிச்சுப் போட்டுக் காமல் உயரத் தூக்கிக் கொண்டை போட்டுக்கணும். மல்லிகைச் சரத்தை ஒரு சுற்று வளைத்துச் சுத்திக்கணும். கொஞ்சம் லேசா 'லாக்டோ காலமின்' பூசிண்டு, பவுடர் போட்டு, மை தீட்டி, பொட்டும் இட்டுண்டா இன்னும் எப்படி அழகா இருப்பே தெரியுமா ?"

அவள் விக்கித்து நின்றாள். ஒரு தாம்பத்திய வாழ்க்கையில் பன்னிரண்டு வருஷங்கள் — ஒரு மகாமகக் காலம் — குறைந்ததல்ல. மகப்பேறு, பற்றாக் குறை, களிப்பு என்று எத்தனையோ தினசரித் தொல்லைகளைச் சமாளித்து எதிர்த்து வாழ்ந்துவிட்ட இறந்த காலம் அந்தப் பன்னிரண்டு வருஷங்கள். இத்தனை நாட்களாக ருக்குவை அவன், 'நீ இப்படி அழகு பண்ணிக்கோ — இப்படி சிரி, எனக்குப் பிடிச்ச மாதிரி புடவை வாங்கிக்கோ' என்று சொன்னதில்லை. ஏன்? இருவரும் அதிகமாகப் புற அழகைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை.

"என்ன பேசமாட்டேன்கிறே ?"

"அப்போ நான் அழகாயில்லையா ?" என்று கேட்ட ருக்கு சட்டென்று உள்ளே தம்பூர்ச் சுருதியுடன் பாடும் தங்கள் மகள் எங்கே கவனித்துவிடப் போகிறாளோ என்று பயந்தாள். அந்தக் காலத்துப் பன்னிரண்டு வயசுப் பெண்ணின் மனத்துக்கும் இந்தக் காலத்துப் பன்னிரண்டு வயசுக்கும் ரொம்ப வித்தியாசமுண்டே ! பிஞ்சு காயாகாமல் வெம்பிப் பழுத்துவிடும் மனோ நிலைதானே இந்தக் காலம்?

"யார் அப்படிச் சொன்னது ? இன்னும் அழகா இருப்பேன்னேன் —" ருக்குவுக்கு மேலும் அந்தப் பேச்சை வளர்க்க விருப்பமில்லை. பிறகு அவன் கணவனை உன்னிப்பாகக்

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது




ஸன்லைட் சோப்பினால் சலவைசெய்து பார்த்தீர்களானால் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை: சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி! சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது ஸன்லைட்**

லின்டாஸ்- S. 62-149 TM (R)

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

கவனிக்க ஆரம்பித்தாள். மணிக் கணக்கில் கண்ணாடி முன்பு நின்று தலையை இழைய இழைய வாருவது, பவுடர், வாசனைத் தைலத்தை அள்ளிப் பூசிக் கொள்வது— இதெல்லாம் அவளுக்கு வியப்பாகவும், விந்தையாகவும் இருந்தன.

சில நாட்களுக்குப் பிறகு மகள் அவளிடம் ஒரு புதுச் செய்தியைக் கூறினாள். 'அப்பா ஸ்கூட்டரின் பின்னாடி ஒரு மாமியோடு பீச்சுப் பக்கம் போயிண்டிருந்தார். நாங்க இன்னிக்கு உல்லாசப் பிரயாணம் போயிட்டு அந்தப் பக்கமாகத்தான் திரும்பி வந்தோம்—'

ருக்குவுக்கு மார்பை அடைப்பது போல் இருந்தது. ''இன்னும் அழகா இருப்பே—''

அப்படியென்றால் அவள் அழகாக இல்லை.

''ஏம்மா ! பேசமாட்டேங்கிறே ?'' என்று மகள் உசுப்பியதும், ''ஒண்ணுமில்லேடி. பாட்டு வாத்தியார் வந்துடுவார். நீ போய் டிபன் காப்பி, சாப்பிடு போ'' என்று ஒருவாறு சமாளித்து அவளை அனுப்பிவிட்டு நிலைக் கண்ணாடியின் முன்பு போய் நின்று பார்க்க ஆரம்பித்தாள்.

மிகவும் சாதாரணமான தோற்றம். நெற்றியெங்கும் தவழும் சுருள் கற்றைகளோ, விற்களைப் போல் வளைந்த புருவங்களோ, பார்ப்பவர்களைச் சுண்டி இழுக்கும் பார்வையோ ஏதுமின்றி அடக்கமாக, அலையெறியாத் தடாகம் போல், பகட்டில்லா நிலவொளி போல் தன்னுள்ளேதான் லயித்துப் புறத்தைப் பார்க்காத ஒரு தன்மை அவளிடம் காணப்படுவதை அவளால் உணர முடிந்தது.

ஒரு குடும்பப் பெண்ணுக்கு, ஏன் ஒரு கடமை தவறாத மனைவிக்கு, கருத்துள்ள தாய்க்கு இதைவிட அழகு எதற்கு என்று ஒரு கேள்வியைத் தன்னை நோக்கியே வீசிக் கொண்டாள் அவள்.

உள்ளேயிருந்து டிபனை முடித்துக் கொண்டு வந்த மகள், 'அம்மா ! அந்த மாமி ரொம்ப அழகா இருந்தா அம்மா. நம்ப... நம்ப ஜெயலலிதா மாதிரி மழு மழுன்னு சூந்தி... பளபளன்னு மின்னித்து. ரொம்பச் சின்ன மாமிதான். நீதான் நைலான் கட்டிக்கிறதே யில்லே. அவள் கட்டிண்டிருந்தாள். ரொம்ப நன்னாயிருந்தது'' என்று வர்ணிக்கவும், '' சரி, போடி ! ஊர்க் கதையெல்லாம் பேசிண்டு. எத்தனை நாளா 'வாதாபி கணபதி' சொல்லிப்பே. போய்ச் சாதகம் பண்ணு போ '' என்று எரிந்து விழுந்தபடி யோசனையில் ஆழ்ந்தாள் அவள்.

தான் அழகாக இருக்க வேண்டும் என்று அவள் ஆசைப்படவில்லை. அவன் ஆசைப்படுகிறான். அவனுக்காக அவள் மாற வேண்டும். சட்டென்று அவள் ஒரு முடிவுக்கு வந்தவளாக, உள்ளே திரும்பி மகளிடம், ''நான் கடைத் தெருவுக்குப் போயிட்டு வரேன். அப்பா வந்தால் டிபன் காப்பி கொடு....'' என்று கூறிப் பையில் நோட்டுக் கற்றையைத் திணித்தபடி தெருவில் இறங்கி நடக்க ஆரம்பித்தாள்.

அன்றுதான் அவள் கடைகளை மிகக் கவனமாக ஆராய்ந்தாள். பெண்களிடம் இயற்கையாகவே இருக்கும் அழகை மேலும் கவர்ச்சியுடன் எடுத்துக் காட்ட, இல்லாததை இருக்கும்படி செய்ய, பிறரைச் சுண்டி இழுக்க, திரும்பிப் பார்த்துச் சிரிக்க, ரசிக்க எல்லாவற்றுக்கும் அழகு ஒரு கடைச் சரக்காக மலிந்து விட்டதை உணர்ந்தாள்.

அவள் நுழைந்த கடை வாசலில் வைக்கப்பட்டிருந்த பெண்களும் பொம்மைகள்தாம்! ஓர் ஆண் பொம்மையை நிறுத்திச் சூட்டும், கோட்டும் போட்டு வைத்தால் என்ன ? ஆண்களிடம் அழகு இல்லையா ? கவர்ச்சி இல்லையா ? சில விநாடிகள் சங்கரின் உருவம் அவள் மனக் கண் முன்பு தோன்றியது. எப்படிப்பட்ட அழகன் அவன் ? சின்னப் பெண் ஒருத்தியை மயக்கித் தன் பின்னால் ஸ்கூட்டர் சவாரி செய்ய வைத்திருக்கும் அழகனாயிற்றே !

அழகுச் சாதனங்களிலிருந்து அயல்நாட்டு நைலக்ஸ் வரை வாங்கிப் பையில் நிரப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்தாள் அவள். சங்கர் அலுவலகத்திலிருந்து வரவில்லை. சிறிய குழந்தைகள் உணவருந்தித் தூங்கிவிட்டார்கள். மகளும் படுத்து விட்டாள். ருக்கு நிதானமாகத் தலை சீவிக் கொண்டை போட்டு, மல்லிகைச் சரத்தைச் சுற்றி, பவுடர் பூசி, செஞ்சாந்துத் திலகமிட்டு, நெற்றியில் இரண்டொரு குழலைச் சுருட்டி வைத்து, நைலக்ஸ் புடவை கட்டி முடிக்கவும் வாசலில் ஸ்கூட்டர் சத்தம் கேட்டது.

அவன் வாசல் கதவைத் திறந்த மனைவியை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அடிபட்டுத் தப்பியோடிய புலியின் சீற்றம் அவன் பெருமூச்சில் தெரிந்தது.

ருக்குவும் அவன் எதிரில் அதிகம் நடமாடாமல் சாப்பிடும் தட்டில் உணவு வகைகளைப் போட்டு எடுத்து வந்து படுக்கை யறை மேஜையின் மீது வைத்தாள். அந்த வீட்டில் அவன் நேரம் கழித்து வரும் இரவுகளில் அப்படியொரு வழக்கம் உண்டு. அவனுக்கு நல்ல பசி. தலை நிமிராமல், பேசாமல் சாப்பிட்டான். பரிமாறும் வளைக் கரத்தில் தவழும் புதிய போலிக் கங்கணத்தைக்கூட அவன் கவனிக்கவில்லை. அதிலிருந்து பலவகை நிறம் கொண்ட கற்கள் இலேசான நீல நிற வெளிச்சத்தில் பளிச்சிட்டன.

சாப்பிட்டு முடித்தவுடன் பீடா உருவத்தில் வெற்றிலைச் சுருளை அவனிடம் தந்தாள் மனைவி. அந்த வீட்டில் அப்படியொரு பழக்கம் கிடையாது. பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு வெவ்வேறாக வைக்கப்பட்டிருக்கும். சில சமயம் ருக்கு மடித்துத் தருவாள்; அது அவனுடைய வேலை காலத்தைப் பொறுத்தது. அவன் நிமிர்ந்து பார்த்தான். ருக்குவும் பார்த்தாள். முகமெங்கும் வியர்வைத் துளிகள் அரும்பியிருந்தன.

''ருக்கு! என்ன இதெல்லாம்?'' என்றபடி அவன் அவளைச் சீற்றத்துடன் பார்த்தான்.

''எதெல்லாம் ?''

''இந்தக் கன்றாவி யெல்லாம் — ''

''எந்தக் கன்றாவி ?''

''ஏய் ! என்னடி விளையாட்டு ? என்னமோ வேஷம் போட்டுண்டு.... சகிக்கலை. தூ.....''

'' என்ன தூ ?'' என்று அவள் நிதானமாக அவனைப் போலவே பேசினாள்.

''நீயும் உன் மூஞ்சியும் !''

''இப்படி இருந்தாத்தானே உங்களுக்குப் பிடிக்கும்? இந்தக் கன்னுவியிலேதானே அழகு ஒளிஞ்சிண்டு இருக்கு ? உதட்டுச் சாயத்துக் குள்ளேயிருந்து சிரிச்சால்தானே சிரிப்பு? மை தீட்டிய (அப்பிய?) கண்ணுலே பார்த்தாத்தானே உங்க மனசுக்குப் பிடிக்கும்?''

''ஏய்! ஏய்! நிறுத்தடி ? நான் அவள் பின்னுலே சுத்தினது தப்புத்தாண்டி....''

''எவள் பின்னுலே ?'' என்று அதிசயப் படுபவள் போலக் கேட்டாள் ருக்கு.

''அது எவளோ ஒண்ணு...... அவளுக்கும் என்னைக் கெடுக்கணும்னு எண்ணமில்லே. எனக்கும் கெட்ட வழியிலே போகணும்னு ஆசையில்லே. ஏதோ மன விகாரம்....''

ருக்கு பலபல வென்று கண்ணீர் உகுத்தாள்.

''அழுவயா என்ன? போடி, பைத்தியம் ! ஒரு நிமிஷத்திலே என்னை மாத்திட்டே. அந்தப் பொண்ணும் அப்படிக் கெட்டவள் இல்லே. 'என்ன சார்! உங்களை என் அண்ணு மாதிரி மனசுலே நெனைச்சுண்டுன்னு பழகினேன்'ணுள். அண்ணுமாதிரி மனசுலே நினைச்சு வெளியிலே சகஜமாப் பழகிணு நாலு பேர் நாலு விதமாப் பேசமாட்டாளா ? பேச ஆரம்பிச்சுட்டாளேன்னேன். 'வாட்! ஸில்லி! இந்த நாட்டிலே ஓர் ஆணும், பெண்ணும் நண்பர்களாக இருக்க முடியாது. பார்த்தீங்களா ? அதுக்கு இன்னும் எத்தனையோ நூற்றுண்டுகள் போகணும். டை டு டை. என்னை மன்னிச்சுடுங்கோ'ன்னு சொல்லிட்டுப் போய் விட்டாள். அதுக்குள்ளே உனக்கு யார் அதை வத்தி வைச்சுட்டா?'' என்று மனைவியை நெருங்கிக் கேட்டான் சங்கர்.

''உங்க பெண்தான் !'' என்று ருக்கு கூறியவுடன் சங்கர் ஹாலில் படுத்துறங்கும் தன்னுடைய அழகிய குடும்பத்தை ஒரு பார்வை பார்த்தான்.

## வட்டமேஜை

கல்லூரிகள் திறக்கும் காலம் நெருங்கி விட்டது. இந்தச் சமயத்தில் கடந்த ஆண்டு கோவை மாணவர் ஒருவர் தற்கொலை செய்து கொண்டது நினைவில் வந்து உறுத்துகிறது. மீண்டும் அத்தகைய துர்ச்சம்பவம் நடவாமல் இருக்கக் கல்லூரி மாணவர்கள் 'ராகிங் டே' என்னும் அந்தப் பொல்லாத கூத்தை இந்த ஆண்டு முதல் நடத்தாமல் இருப்பார்கள் என்று நம்புகிறேன்.

உதகை அரசினர் கலைக் கல்லூரி மாணவர்களின் சார்பாக இந்த வேண்டுகோளினைத் தமிழக அனைத்துக் கல்லூரி மாணவர்களுக்கும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நீலகிரி — இளவேந்தன் கோபாலன்
4-6-69

சென்ற 25-5-69 கல்கி இதழில் 'வாஞ்சீசவரன்'' தம்பதியினர் நைஜீரியாவைப் பற்றிக் கூறியிருக்கும் தகவல்களைப் படித்தேன். அவர்கள் வசிப்பது நைஜீரியாவின் வடக்குப் பகுதி. நாங்கள் வசிப்பது நைஜீரியாவின் தலை நகரமான லேகாஸ். இது தென் மேற்குப் பகுதியில் இருக்கிறது. பெரும்பான்மையான இந்தியர்கள் தலைநகரில்தான் இருக்கிறார்கள். தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் இருபது குடும்பங்களுக்கு மேல் இருக்கிறார்கள். இந்த ஊர் ஜனங்கள் மிகவும் நல்லவர்கள். பொறுமைசாலிகள். புதிதாக வருபவர்கள் "இந்த ஊரிலும் சண்டை நடக்கிறதா?'' என்று ஆச்சரியப்படும்படி அமைதியாக நடந்து கொள்கிறார்கள். நாளுக்கொரு சட்டமும் பொழுதுக்கொரு தடையும் வந்தாலும் புரட்சி செய்யாமல் அமைதியாக ஏற்றுக் கொள்கிறார்கள். குறிப்பாக மாணவர்கள் அரசியலில் ஈடுபட்டுக் கிளர்ச்சி செய்வது கிடையாது. சண்டை நடக்காத ஊர்களில் நடக்கும் புரட்சிகளையும் போராட்டங்களையும் பார்க்கும்போது இங்கு சண்டை நடக்கும்போது நிலவும் அமைதி பாராட்டுக்குரியது. அநேகமாக எல்லோருக்கும் ஆங்கிலம் தெரியும். நாட்டு நடப்புக்களை உன்னிப்பாகத் தினசரிகளில் படித்துத் தெரிந்து கொள்ளுகிறார்கள். வெளிநாட்டுக்காரர்களை மிகவும் மதித்து மரியாதையோடு நடந்து கொள்கிறார்கள். வெளியில் போனால், 'ஒய்போ' என்று கத்திக் கொண்டு குழந்தைகள் சூழ்ந்து கொள்வார்கள். 'ஒய்போ' என்றால் வெளிநாட்டுக்காரர்கள். ஆண்களின் பார்வையில் விஷமம் கிடையாது. பெண்களை அநாகரிகமாக முறைத்துப் பார்க்கும் ஆண்களை இங்கு காணவே முடியாது. இரவு பன்னிரண்டு மணி வேளையிலும் பெண்கள் தனியாகத் தைரியமாகத் தெருவில் நடமாடுவார்கள். காந்திஜி, சாஸ்திரிபோன்ற தன்னலமற்ற தலைவர்களிடம் இவர்களுக்கு மிகவும் ஈடுபாடு உண்டு. தமிழ் சினிமாக்களை விரும்பிப் பார்க்கிறார்கள். ஆனந்தன் இவர்களுக்கு மிகவும் பிடித்த ஹீரோ. அவரை, 'காதல் இளவரசன்' என்று பத்திரிகைகளில் குறிப்பிடுவார்கள். கத்திச் சண்டைப் படங்கள் இங்கு அமோக வரவேற்பைப் பெறுகின்றன. இப்போது இங்கே நடக்கும் உள்நாட்டுச் சண்டை முடியும் வரை கொஞ்சம் கஷ்டம்தான். இந்த யுத்தம் வராதிருந்தால் பொருளாதாரத்திலும் தொழில் துறையிலும் கணிசமான அளவு முன்னேறியிருப்பார்கள். பெண்கள் நல்ல உழைப்பாளிகள். முதுகில் குழந்தையை வரிந்து கட்டிக் கொண்டு அயராது உழைப்பார்கள். வியாபார ஸ்தலங்களில், கடைகளில் எங்கு பார்த்தாலும் பெண்கள்தான்.

லேகாஸ், நைஜீரியா
7—6—69 — அலமேலு ஸ்ரீநிவாசன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31.
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# ஸிம்ஸன் கம்பெனியின்

## பெர்கின்ஸ் P6V டீசல் ரீபில்ட் என்ஜின் திட்டம்



ஸிம்ஸன் பாக்டரியிலேயே உருவான ரீபில்ட் என்ஜின் பழைய என்ஜினுக்கு பதிலாக கொடுக்கப்படும். இந்த திட்டத்தின் கீழ் பெர்கின்ஸ் என்ஜின்களை உபயோகிப்பவர்கள் அனைவரும், அவர்களுடைய பழைய என்ஜின்களை எத்தனை தடவை வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்

### மேற்படி ரீபில்ட் திட்டத்தின் அனுகூலங்கள் பின் வருமாறு:

1. ரீபில்ட் என்ஜின்களுக்கு புது என்ஜினுக்குள்ள எல்லாவிதமான உத்தரவாதமும் உண்டு.
2. ரீபில்ட் என்ஜினை குறைவான விலையில் பெறவும் உதவுகிறது.
3. எப்பொழுது வேண்டுமானாலும் விரும்பிய சமயத்தில் கால தாமதமில்லாமல் பழைய என்ஜினை மாற்றிக் கொள்ளலாம்.
4. இந்த திட்டத்தின் பிரத்தியேக அனுகூலம் என்னவென்றால் பெர்கின்ஸ் என்ஜின்களை உபயோகிப்பவர்களுக்கு அவர்களுடைய என்ஜின்களை அகற்றி ஸ்பேர் பாகங்களுக்காகவோ ரிப்பேருக்காகவோ காத்திருக்கும் கால நஷ்டமில்லாமல் உடனேயே ரீபில்ட் செய்த என்ஜினை பொருத்திக் கொள்ள வசதி கிடைக்கிறது.
5. ரீபில்ட் என்ஜின் புது என்ஜினைப்போல் பரிசீலனை செய்யப்பட்டு பூர்ணமான திருப்தி அடைந்த பிறகே வழங்கப்படுகிறது.

பெர்கின்ஸ் ரீபில்ட் என்ஜின் திட்டத்தைப் பற்றிய முழு விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு தயவுசெய்து எழுதவும்

**ஸிம்ஸன் அண்டு கம்பெனி லிமிடெட்**
(பிளாண்ட் 11)

தபால் பெட்டி No. 856, செம்பியம், சென்னை 11
கிளைகள்: பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, சிகந்தராபாத்.



For PERKINS Engines
Simplex Genuine Spare Parts
R/ REGD TRADE MARK